# மங்கை

ஜூலை '95

முழுக்க முழுக்க வண்ணத்தில்...



மற்றும்

சமையல் குறிப்புகள், கதை,
கவிதை, கட்டுரைகளுடன்
படித்து பாதுகாக்கும்
வண்ணமலராக உங்கள் மங்கை

விலை ரூ.8/—



# அம்புலிமாமா

*ஜுலை 1995*



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.5.00**

**வருட சந்தா ரூ.60.00**




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி



## கல்வி நிலையங்களில் அரசியல்!

கல்வி ஆண்டு தொடங்கி விட்டது. மாணவர்கள் மேல் வகுப்புகளுக்குச் செல்கிறார்கள். வகுப்பாசிரியர் வகுப்புத் தலைவனை நியமித்து மற்ற மாணவர்களின் படிப்பையும் நடத்தையையும் அவனது உதவியுடன் கண்காணிக்கிறார்.

ஆனால் மாணவர் தலைவன் விஷயத்தில் தேர்தல் நடக்கிறது. அரசியல் கட்சிகள் தமக்கு ஆதரவு அளிக்கும் மாணவர்களை இத்தேர்தலில் போட்டியிட வைக்கின்றன. சாதாரணத் தேர்தலில் நடப்பது போல இதிலும் பல முறைகேடான வழிகள் பின்பற்றப்படுகின்றன. குழப்பம் ஏற்படுகிறது. இதற்கெல்லாம் காரணம் மாணவர் தலைவன் தேர்தலில் அரசியல்வாதிகளின் குறுக்கீடே.

கேரளாவில் இரு பள்ளிகள் பெற்றோர்களிடம் பல கேள்விகள் கேட்டு ஒரு ஆய்வு நடத்தின. அதில் கேட்கப்பட்ட ஒரு கேள்வி மாணவர்கள் அரசியலில் பங்கேற்கலாமா என்பது. எல்லாப் பெற்றோருமே கூடாது என பதில் அளித்தனர். இவ்வாறு பதில் அளித்தவர்களில் சட்டமன்ற உறுப்பினர்களும் அரசியல்வாதிகளும் இருந்தனர். இவர் களும் 'கூடாது' எனப் பதில் அளித்தவர்களே.

அரசியல் கட்சிகள் கல்வி நிலையங்களில் ஈடுபடாமல் மாணவர்களைக் கல்வி பயில விட வேண்டும். மாணவ சக்தியை அரசியலுக்காகப் பயன்படுத்தி சிதற விடக் கூடாது. கல்வி நிலையங்களில் அரசியல் புகாமல் இருப்பதுதான் மாணவர்களுக்கு நன்மை.

மதிமுகம்: 97 ஜூலை 1995 புன்னகை: 1

தனிப்பிரதி: ரூ.5.00 வருட சந்தா: ரூ.60.00



# பிரான்ஸின் புதிய அதிபர்

**பி**ரான்ஸின் புதிய அதிபராக ஜாக்குவீ சிராக் மே 17ந் தேதி தேர்ந்தெடுக்கப்பட்டார். அதற்குமுன் நடந்த தேர்தலில் கன்சர்வேடிவ் கட்சியை சேர்ந்த இவர், சோஷலிஸ்ட் கட்சி வேட்பாளரான லயோனல் ஜாப்ஸியைத் தோற்கடித்தார். சிராக்கின் வெற்றி 14 ஆண்டுகளாக ஆண்ட சோஸலிஸ்ட் கட்சி அதிகாரத்தை முடிவிற்கு கொண்டு வந்தது.

இரண்டாவது உலகப் போருக்குப் பின் பிரான்ஸின்நீண்டகாலஅதிபராகஇருந்த பிரான்ஸுவா மித்தரண்ட் இதே சிராக்கை 1981லும் 1988லும் நடந்த அதிபர் தேர்தல்களில் தோற்கடித்தவர். இம்முறை உடல் நலம் குன்றியதால் அவரால் தேர்தலில் போட்டியிட முடியவில்லை.

இரண்டாவது உலகப் போருக்குப் பின் சார்லஸ் டிகால் பிரான்ஸின் அதிபராகிநாட்டின் ஸ்திரத்தன்மையைக் காக்க முயன்றார். ஆனால் அப்போது பிரெஞ்சுக் குடியேற்ற நாடுகளின் பிரச்னையைச் சமாளிக்க வேண்டி வந்தது. இந்தோ சீனாவில் (தற்போதைய வியட்நாம், லாவோஸ், கம்போடியா) கலவரங்கள் ஏற்பட்டன. டிகால் முதலில் பிரெஞ்சுப் படைகளைஇப்பகுதிகளிலிருந்துதிரும்பி வரச் செய்தார். அதன்பின் அவற்றிற்கு சுதந்திரம் அளித்தார். 1968ல் அவர் தம் பதவியை ராஜினாமா செய்தார். ஆனால் அவருக்குப் பின் பதவி ஏற்றவர்களும் அவரது கொள்கைகளையே பின்பற்றினார்கள்.

சோஸலிஸ்ட் தலைவர் மித்தரண்ட் 1981ல் பிரான்ஸின் அதிபரானார். அப்போது கடும் பொருளாதாரநெருக்கடியும்வேலையின்மையும் நாட்டின் பெரும் பிரச்னைகளாக இருந்தன. இந்நிலையில் சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த மித்தரண்ட் பதவி ஏற்றதால் தமக்குப் பெரும்நன்மைகிட்டும்எனஎண்ணிமக்கள் மகிழ்ச்சி அடைந்தனர். 14 ஆண்டுகளுக்குப் பிறகு அதிகாரம் இப்போது சிராக்கைக்கு மாறியுள்ளது.

1993ல் நடந்த தேர்தலில் கன்வர்வேடிவ்களுக்குப்பெரும்பான்மைகிடைத்தது. கன்சர்வேடிவ் எட்வர்ட் பல்லாடர் பிரதமரானார். அவர் இந்தக் கொஞ்ச காலத்தில் வேலையின்மைப் பிரச்னைக்கு நல்ல பரிகாரம் தேடினார் எனக் கூறப்படுகிறது. பல்லார்டர் கூட அதிபர் பதவிக்குப் போட்டியிட்டார். ஆனால் முதல் சுற்றிலேயே தோற்றுப் போனார். அதனால் அவர் தம் பிரதமர் பதவியை ராஜினாமா செய்தார்.

சிராக்கின் வயது 62. அவர் தம் 30 ஆண்டு அரசியல்வாழ்வில்இருமுறைபிரான்ஸின் பிரதமராகஇருந்திருக்கிறார். அதற்குமுன் அவர் வேளாண் துறை அமைச்சராக இருந்த போது நாட்டின் ஆப்பிள் ஏற்றுமதியை அதி கரித்தார். இதில் பிரான்ஸ் உலகில் இரண்டா வது இடம் பெற்றது. சிராக் பாரிஸ் நகர மேய ராக இருந்து கொண்டே அதிபர் பதவிக்குப் போட்டி போட்டார். அவரது சின்னம் ஆப்பிள்.

தேர்தல் வெற்றி விழாவை மே 10ல் கொண்டாடிய மக்கள் 'இனி நிலை சீர்திருந்தும்' என்று கோஷங்களை எழுப்பினார்கள். சிராக்கும் 'வேலையின்மையை ஒழிப்பதே நம் முதல் கடமை' எனவும் அறிவித்தார்.





# வயதாகிறதே!

குருமலை அடிவாரத்திலுள்ள குயிலூரில் குருநாதன் என்பவன் இருந்தான். அவன் எந்த வேலையையும் எளிதாகச் செய்து விடுவதால் ஊரார் எதற்கும் அவன் உதவியை நாடினார்கள். குருநாதனும் அவர்களுக்கு மகிழ்ச்சியுடன் உதவி வந்தான்.

குருநாதனின் வயது ஐம்பதிற்கும் மேலாகி விட்டது. ஆனாலும் தன்னால் எந்த வேலையையும் திறமையுடனும் உற்சாகத்துடனும் செய்ய முடியும் என்று அவன் எண்ணினான். ஆனால் அந்த ஊர்க்காரர்களோ புதிதாக அவ்வூருக்கு வந்த மாணிக்கம் என்ற இளைஞனை கடினமான வேலைகளைச் செய்ய உதவிக்கு கூப்பிட்டனர்.

இது குருநாதனுக்கு மிகுந்த மன வருத்தத்தை அளித்தது. அதைத் தன் மனைவி லட்சுமியிடம் கூறவே அவள் சிரித்து ''இந்த கிராமத்தவருக்கு உங்களிடம் மிகுந்த மரியாதை. உங்களுக்கு வயதாகி விட்டதால் உங்களைச் சிரமப்படுத்த வேண்டாமென எண்ணி அவர்கள் இளைஞரான மாணிக்கத்தை நாடுகிறார்கள்'' என்றாள்.

குருநாதனோ ''திறமைக்கு வயது வரம்பு ஏது? மாணிக்கம் இளைஞனாக இருந்தாலும் என்னைப் போல ஒரு வேலையை அவனால் செவ்வனே செய்ய முடியாதே. இது ஊராருக்குத் தெரியாதா?'' என்று கேட்டான்.

லட்சுமி தன் கணவனிடம் அதற்கு எவ்விதப் பதிலும் கூறவில்லை. தனக்குத் தெரிந்தவர்களிடம் தன் கணவனின் மனக் குறையைக் கூறினாள். அவர்களோ ''ஆச்சரியமாக இருக்கிறதே. முன்பெல்லாம் குருநாதன் இப்படிக் கூறியதே இல்லையே. அப்போதும் கூட நாங்கள் வேறு சிலரை

—பாபநாசம் சாமா—

யும் உதவிக்கு நாடினோமே. தேவைப் பட்டால் எல்லோரும் என்னிடமே வாருங்கள், நானாகப் போக மாட் டேன் என்றெல்லாம் குருநாதன் கூறு வானே. பாவம்! வயதாகி விட்டதால் இப்படித்தடுமாறுகிறான் போலிருக் கிறது!'' என்றனர்.



குருநாதன் இதைக்கேட்டு மேலும் வருத்தப்பட்டான். தான் முன்போலத் திறமையுடனும் சுறுசுறுப்பாகவும் வேலையை செய்ய முடியும் என எல் லோருக்கும்காட்ட விரும்பினான். ஒருநாள் அவன் மற்ற ஊர்ப் பிரமுகர் களுடன் கிராம மணியகாரர் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தான். அங்கு மாணிக்கமும் இருந்தான். அப்போது ஜமீன்தாரரின் அலுவலக அதிகாரி ஒருவர் அங்கு வந்தார்.

அவரை மணியகாரர் வணங்கி வரவேற்கவே அவரும் அங்கிருந்தவர் களை எல்லாம் பார்த்து விட்டு ''நம் ஜமீனின் ஜனத்தொகை, வயல் வரப்பு, ஆறு, கால்வாய், குளம் பற்றி விவரங்கள் சேகரித்திருக்கிறேன். ஜமீன்தாரர் பட்டணத்திலிருந்து நாளை வருகிறார். அப்போது இந்த விவரங்களை அவரிடம் கொடுக்க வேண்டும். இவை முந்நூறு பக்கங் களில் எழுதப்பட்டுள்ளன. இவற்றில் எழுத்துப் பிழை, கூட்டல் கழித்தல் பிழை உள்ளதா எனப் பார்க்க வேண் டும்'' என்று கூறி நிறுத்தினார்.

மணியகாரர் ''அதற்கு நாங்கள் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கவே, அந்த அதிகாரியும் ''இந்த ஊரில் நன்கு படித்தவர்கள் இருப்பதா கக் கேள்விப்பட்டேன். அவர்களில் யாராவது ஒருவர் இந்த முந்நூறு பக் கங்களையும் சரி பார்த்து தேவைப் படும் இடங்களில் திருத்தி நாளை மாலைக்குள் கொடுக்க வேண்டும். இந்த உதவியைப் பெறவே நான் வந் திருக்கிறேன்'' என்றார்.

''இதுதானா! இதை எல்லாம் இந்த மாணிக்கம் செய்து முடிக்கக்கூடிய வன். என்ன மாணிக்கம்? ஐயா சொன்னதைக் கேட்டாயா? நீ இந்த வேலையை மேற்கொள். ஜமீன்தார ரின் ஆதரவும் எதற்காவது உனக்குக் கிடைக்கும்'' என்றார்.

மாணிக்கமோ ''முந்நூறு பக்கங்

களா! எழுத்துப் பிழை, கூட்டல் கழித்தல் சரி பார்த்தல் என்றெல்லாம் சரி பார்க்க குறைந்தது மூன்று நாட்களாவது வேண்டும். ஒரே நாளில் என்னால் முடியாது'' என் றான்.

அது கேட்டு அதிகாரி ''இது நாளைக்குள் வேண்டுமே. இங்கு யாராவது ஒருவரால் செய்ய முடியும் என்று மிகுந்த நம்பிக்கையோடு வந்தேன். என்ன செய்வேன்?'' என்று கூறித் தவித்தார். அப்போது குருநாதன் ''தங்களுக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை என்றால் இந்த வேலையை நான்செய்துதருகிறேன்'' என்றான்.

அதிகாரியும் ''உங்களது திறமை பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் இப்போது உங்களுக்கு வயதாகி விட்டதே என்று தான் நினைத்தேன். நீங்கள் இதைச் செய்து கொடுப்பதில் எனக்கு மகிழ்ச்சியே'' என்றார். குருநாதனும் அவர் கொடுத்த காகிதக் கட்டை வாங்கிக் கொண்டு போய் சிரத்தையுடன் சரி பார்த்து மறுநாள் மாலைக்குள் அவரிடம் கொடுத்தான்.

அதிகாரியும் அதனை எடுத்துக் கொண்டு போய் ஜமீன்தாரரிடம் கொடுத்தார். ஜமீன்தாரரும் அதை நன்கு பரிசீலித்துப் பார்த்து அதில் தப்பிதமே இல்லாதது கண்டு அந்த அதிகாரியைப் பாராட்டினார். அது பற்றி ஜமீன்தாரரே பலரிடம் புகழ்ந்தும் கூறினார்.

குருநாதனும் எல்லோரிடமும் ''பார்த்தீர்களா? ஜமீன் அலுவலக



அதிகாரி முந்நூறு பக்கங்கள் கொண்ட புள்ளி விவரக் கட்டை ஒரே நாளில் பரிசீலித்துக் கொடுக்கும்படி வேண்டி னார். நானும் சிரமமில்லாமல் ஒரே நாளில் அந்த வேலையைச் செய்து முடித்தேன். எனக்கு இதைவிட அதிக நாட்கள் தேவைப்படவும் இல்லை'' என்று உற்சாகத்துடன் மகிழ்ச்சி ததும்பக் கூறினான்.

ஒருமுறை கிராம அதிகாரி நோய் வாய்ப்பட்டார். அவருக்குச்சிகிச்சை அளிக்க சில அபூர்வ மூலிகைகள் தேவைப்பட்டன. அவை சக்கரபுரத்தி லுள்ள ஒரு குறிப்பிட்ட வைத்தியரி டம் மட்டுமே இருந்தன. அவரிடம் கிராம அதிகாரியின் நோய் பற்றி விளக்கமாகக் கூறி அந்த மூலிகை களை அவரிடமிருந்து வாங்கி வர வேண்டும். அந்த வைத்தியர் சமஸ் கிருதத்தில்தான் பேசுவார். வேறு எந்த மொழியிலும் பேசுவதில்லை என்று விரதம் பூண்டவர்.

கிராம அதிகாரியும் ''மாணிக் கத்தை அந்த வைத்தியரிடம் அனுப் புங்கள்'' என்றார். ஆனால் சக்கரபுரத் திற்குப் போகும் வழியில் உப்புக் காற்று வீசும். அதைத் தாங்கக் கூடிய சக்தி தனக்கு இல்லை என்றும் அப் பயணம் செய்ய ஒரு வார முன்பி ருந்தேதயாரிப்புகள்செய்து கொண்டி ருக்கவேண்டும்என்றுகூறிமாணிக் கம் தன் இயலாமையைத் தெரிவித் தான்.

இந்த நிலையில் குருநாதன் தான் போய் மூலிகைகளை வாங்கி வருவ தாகக் கூறிக் கிளம்பிச் சென்றான்.





விளையும் என்றும் எல்லோரும் நம்பி வந்தார்கள்.

அந்த ஊரை அடுத்த காட்டினுள் ஒருவிசித்திரமானமரம்இருந்தது. அம்மரத்தின் இலைகள் ஒன்று போல இராமல்மாறுபட்டவைகளாகஇருக்கும். அவற்றில் சிலவற்றில் மட்டும் திரிசூல வடிவம் இருக்கும். அம் மாதிரி இலைகளில் நூற்று எட்டை எடுத்து வந்து மாலையாகக் கட்டி அம்மனுக்குஅணிவித்துத்திருவிழா நடத்த வேண்டும். மறுநாள் அந்த மாலையை எடுத்துக் கொண்டு அந்த விசித்திர மரத்திற்குப் போய் அதன் கிளையில் தொங்க விட வேண்டும். இதனை இலையை எடுத்து வந்தவனே செய்ய வேண்டும்.

காட்டிற்குள் போய் இலைகளைக் கொண்டு வந்து மாலை கட்டி அம்மனுக்கு அணிவித்து விழாவில் கலந்து கொண்டுவிட்டு திரும்பவும் மாலையை எடுத்துக் கொண்டு போய் அந்த மரத்தில்மாட்டிவிட்டுவருவது என்பது மிகவும் சிரமமான வேலை. இதை எல்லோராலும் செய்து விட முடியாது.

குருநாதன் முன்பு பலமுறைகள் இப்பணியைச் செய்தவனே. இந்த முறையும் அதனை அவனே செய்யவே ஊரார் அவனைப் பெரிதும் பாராட்டினார்கள். குருநாதனின் மனைவி லட்சுமியும் அவனது விடாப்பிடி முயற்சியை புகழ்ந்தாள். இதுபோன்ற பல வேலைகளை குரு

அவன்சக்கரபுரம் போய் அந்த வைத்தியரைக் கண்டு பேசி மூலிகைகளையும் வாங்கிக் கொண்டு தன் ஊருக்கு வந்து கிராம அதிகாரியிடம் அவற்றைக் கொடுத்தான்.

வேறொரு முறையில் ஊர்க்காரர்கள்அம்மன்திருவிழாவை விமரிசையாக நடத்தத் தீர்மானித்தார்கள். திருவிழாவின் முக்கிய நாளன்று வயது வித்தியாசம் பாராமல் அம்மன் கோவில் பிரகாரத்தை வலம் வந்து கொண்டே இருக்க வேண்டும் என்பது நடைமுறை விதி. அவர்கள் ஒரு விநாடி கூட எங்கும் உட்காரக் கூடாது. அவ்வாறு செய்தால் ஊருக்கு நல்லது என்றும் அப்படிச் செய்யாவிட்டால்ஊருக்குக்கெடுதல்

நாதன் செய்து காட்டி தான் மாணிக்கத்தை விட எல்லா விதத்திலும் உயர்ந்தவனே என்று நிலை நாட்டி வந்தான்.

இவ்வளவு இருந்தும் ஊரார் முக்கியமான வேலைகளுக்கு மாணிக்கத்தைத்தான் உதவிக்குக் கூப்பிட்டுக் கொண்டார்கள்.

ஒருநாள் குருநாதனின் நண்பன் சிவசாமி அவனைக் காண அடுத்த ஊரிலிருந்து வந்தான். அவனது ஊரில் இரண்டு ஆண்டுகளாக மழையே பெய்ய வில்லையாம். கிணறு குளம் வெட்டச் சொன்னால் எந்த அதிகாரியும் காதில் போட்டுக் கொள்ளவே இல்லையாம். மன்னனிடம் முறையிடலாமென்றால் அவரது அரண்மனைக்கு முன் போய் ஏதாவது ஒரு நடவடிக்கையை மேற்கொண்டு அவரது கவனத்தை ஈர்க்க வேண்டும். அதைக் கண்டு மன்னன் அழைத்தால் குறைகளைக் கூறி முறையிடலாம்.

இதை எல்லாம் கஷ்டப்பட்டுச் செய்து மன்னனைக் கண்டாலும் அவரிடம் விஷயத்தைப் பக்குவமாய் எடுத்துக் கூறும் திறமை அவனுக்கு இருக்க வேண்டும். இப்படிப்பட்டவன் யாருமே ஊரில் இல்லை என்று கூறி ''இந்த ஊரில் யாராவது இருக்கிறானா?'' என்று கேட்டான். இது கேட்டு குருநாதன் ஆத்திரம் கொண்டான். தன்திறமையை அறிந்திருந்தும் சிவசாமி தன்னை உதவிக்குக் கூப்பிடாததால் கிராம அதிகாரியிடம்



போய்க் கேட்கும்படி குருநாதன் கூறி னான்.

சிவசாமியும் கிராம அதிகாரியைச் சந்தித்துவிட்டுத்திரும்பிவந்து குருநாதனிடம் ''அவர் மாணிக்கம் என்பவனின் பெயரைக் கூறினார். அது மட்டுமல்ல உன்னைக் கொண்டே மாணிக்கத்தை இந்த வேலையைச் செய்ய ஒப்ப வைக்க வேண்டும் என்றும் கூறினார்'' என்றான்.

இதுகேட்டு குருநாதன் ஆவேசத்தோடு ''இதோ பார்! ஒரே நாளில் ஒருஅதிகாரியின்புள்ளிவிவரங்களடங்கிய முந்நூறு பக்கங்களைச் சரி பார்த்துக் கொடுத்தவன் நான். கிராம அதிகாரிக்கு அபூர்வ மூலிகைகளைக் கொண்டு வந்து கொடுத்தவன் நான்.

அம்மன் திருவிழாவில் விசித்திர இலைகளைக் கொண்டு வந்து மாலை தொடுத்து அணிவித்து பிறகு அதைக் காட்டினுள் எடுத்துப் போய் அதன் மரத்தில் தொங்கவிட்டு வந்தவன் நான். இப்படிப்பட்ட நான் இருக்க உனக்கு அந்த மாணிக்கம்தான் வேண்டுமென்றால் நீயே போய் அவனிடம் பேசு. நான் வரமாட்டேன்'' என்றான்.

சிவசாமி அவனை ஆச்சரியத்தோடு பார்த்து ''அப்படியானால் கிராம அதிகாரி சொன்னது சரிதான்'' என்றான். குருநாதன் திடுக்கிட்டு ''கிராம அதிகாரி என்னைப் பற்றி ஏதாவது சொன்னாரா?'' என்று கேட்டான்.

சிவசாமியும் ''நீ இதற்கு முன் எந்தக் கடினமான வேலையைச் செய்தாலும் அதுபற்றிப் பேச மாட்டாயாம். அதில் சிரமமே இல்லை என்றும் கூறுவாயாம். ஆனால் இப்போதெல்லாம் ஒரு வேலையைச் செய்தால் அது எவ்வளவு கஷ்டமானது என்று விவரிக்கிறாயாம். அவர் சொன்னது போல உனக்கு வயதாகி விட்டதுதான். நீ ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமே'' என்றான்.

அப்போதுதான் குருநாதனுக்குத் தன்னிடம் ஏற்பட்ட மாறுதல் தெரிந்தது. முன்பு எந்த வேலையையும் சிரமமானது எனக் கூறாமல் செய்தான். இப்போது அதை உணர்ந்து கூறுவதால் மற்றவர்கள் அவனுக்கு வயதாகி விட்டதாகக் கூறுகிறார்கள். மாணிக்கம்தான் செய்ய முடிந்த வேலையைச் செய்கிறான். செய்ய முடியாததைதன்னால் அது முடியாது என்றே கூறி விடுகிறான். அவனுக்குத் தன் சக்தியையும் திறமையையும் காட்ட வேண்டும் என்ற ஆசையும் இல்லை. வயதானவர்கள்தான் அப்படி ஆசைப்படுகிறார்கள்.

இதை உணர்ந்து குருநாதன் பிறர் தன்னைப் பாராட்ட வேண்டும் என்று ஆசைப்படாமல் நிம்மதியாக இருந்து காலம் கழித்து வரலானான்.






# 9

(புவன சுந்தரியின் காரணமாக கிரேக்கர்களுக்கும் ட்ரோஜன்களுக்கும் நடந்து வந்த போர் கடைசி கட்டத்தை அடைந்தது. இரு தரப்பிலும் பல மாபெரும் வீரர்கள் மடிந்தனர். ட்ராயைக் கைப்பற்ற ரூபதரன் ஒரு திட்டம் வகுத்து ஒரு பெரிய மரக் குதிரையைத் தயாரித்தான். அதன் வயிற்றில் கிரேக்க வீரர்கள் ஒளிந்து இருந்தனர். அக்குதிரையையும் சௌர்யநாதன் என்ற ஒற்றனையும் விட்டு விட்டு கிரேக்கர்கள் தம் கப்பல்களில் ஏறித் தம் நாட்டிற்குத் திரும்பிப் போவது போல பாவனை செய்தனர். ட்ரோஜன்கள் மகிழ்ந்து போய் அக்குதிரையை நகருக்குள் இழுத்துச் சென்றனர். பிறகு–)

நகருக்குள் மரக்குதிரை இழுத்து செல்லப்பட்டதும் அதனுள்ளிருந்த கிரேக்க வீரர்கள் இனி என்ன நடக்குமோ என்று உள்ளூர பயந்து கொண்டே இருந்தார்கள். வெளியே நடந்த ஆர்ப்பாட்டங்கள் வேறு அவர்களைக் கலக்கின. எல்லோரும் ரூபதரனையே பார்க்கலாயினர். ரூபதரன் அவர்களிடம் பொறுத்திருக்குமாறு கூறினான்.

மாலையான போது புவன சுந்தரி தன் கணவன் அரிபயங்கரனுடன் மரக் குதிரையை பார்க்க வந்தாள். அவள் அக்குதிரையைத் தடவிப் பார்ப்பது போல நடித்து குதிரைக்குள் மறைந்திருந்த கிரேக்க வீரர்களுக்கு உற்சாக மூட்டும் வகையில் சில வார்த்தைகளைக் கூறினாள். அதனால் ரூபதரன், தேவமயன், பிரதாபன் ஆகியோர் மிகவும் மகிழ்ந்து போனார்கள். புவன




பூனை போல நடந்து வந்து வஜ்ஜிர காயனின் சமாதியருகே நின்றான். அவன் அங்கு பெருந்தீயை மூட்டி னான். அதுகண்டு பிரத்தியாமயன் கடற்கரைக்கு ஓடி தீவட்டியை ஏற்றி ஆட்டி கடலிலுள்ள கிரேக்கப் கப்பல் கள் கரைக்கு வரலாம் எனச் சைகை செய்தான். கிரேக்கக் கப்பல்களும் கரைக்கு வந்து விட்டன.

ராஜராஜனின் கட்டளையின் பேரில் பிரத்தியாமயன் நகருக்குள் போய் மரக் குதிரையருகே நின்று ''எல்லாம் சரியாக உள்ளது'' எனக் கூறினான். உடனே ரூபதரன் ''கத வைத் திறந்து கொண்டு வெளியே போங்கள்'' என்று கட்டளையிட் டான். குதிரையின் மேல் பகுதியி லுள்ளகதவைத்திறந்ததும்நூலேணி போடப்பட்டது. கிரேக்க வீரர்கள் ஒவ் வொருவராக இறங்கி வந்தார்கள்.

அவர்களில் சிலர் கோட்டைக் கதவுகளைத் திறக்க ஓடினார்கள். அவற்றைத் திறந்து வைத்தால் தானே கப்பலிலிருந்து கரை இறங்கிய வீரர் கள் நகருக்குள் புக முடியும்! எனவே கோட்டை வாசலில் படுத்து உறங்கிய ட்ரோஜன் காவல் வீரர்களை அவர்கள் கொன்று கோட்டைக் கதவுகளைத் திறந்து வைத்தார்கள்.

பிரதாபன் தன் மனைவி புவன சுந்தரியைக் காண அவளது மாளி கைக்கு ஓடினான். அதன் பிறகு ட்ராய் நகரில் பயங்கரத் தாக்குதலை கிரேக்க வீரர்கள் நடத்தினார்கள். ஆயுதங்

சுந்தரியின் குரலைக் கேட்டதும் அவர் களது உற்சாகம் கரைபுரண்டு ஓடி யது. அப்போதே குதிரையிலிருந்து வெளியே செல்லத் துடித்தவர்களை ரூபதரன் அடக்கி வைத்தான்.

புவனசுந்தரி திரும்பிச்சென்றாள். இரவாகியது. ட்ரோஜன்கள் பகலில் விழாக் கொண்டாடிக் குதித்துக் கும் மாளம் அடித்ததால் மிகவும் களைத் துப் போய் மெய்மறந்து தூங்கினார் கள். ஒருநாய்கூடக்குரைக்கவில்லை. ஆனால் புவன சுந்தரி மட்டும் தூங்க வில்லை. கண் விழித்திருந்தாள். அவள் அறை முன் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அது கிரேக்கர்களுக் கான சைகை.

நள்ளிரவு வந்தது. செள்ரிநாதன்

களற்ற ட்ரோஜன்களை ஈவு இரக்கம் பாராமல் அவர்கள் வெட்டித் தள்ளி னார்கள். வீடுகளில் புகுந்து பெண் கள், வயோதிகர்கள், குழந்தைகள் என்று கூடப் பாராமல் எல்லோரை யும் வெட்டிக் கொன்றனர்.

வர்த்தனனும் அவன் மனைவியும் புதல்விகளும் ஓடி ஒரு ஆலயத் திற்குள் ஒளிந்து கொண்டார்கள். வெளியே நடக்கும் படுகொலையைக் கண்டு வர்த்தனன் கொதித்தெழுந்து கிரேக்கர்களைத் தாக்கக் கிளம்பி னான். ஆனால் அவனது மனைவி அவனைத் தடுத்து நிறுத்தினாள்.

ஆனால் தன் புதல்வர்களில் ஒருவனைகிரேக்கர்கள்துரத்துவதைக் கண்ட வர்த்தனன் வெளியே ஓடி னான். அவள் மகனைப் காப்பாற்று வதற்குள் நவயோதன் அவனைக் கொன்று வர்த்தனனையும் தன் வீரர்களோடு சேர்ந்து சூழந்து கொண் டான். எல்லோரும் வர்த்தனனை அரண்மனை வாசலுக்கு இழுத்துப் போய் அவனை அங்கு கொன்றார் கள்.

புவன சுந்தரியின் மாளிகைக்கு பிரதாபனுடன் ரூபதரனும் சென் றான். இருவரும் வெகு நேரம் வரை அரிபயங்கரனுடன் போரிட்டனர். அப்போது புவனசுந்தரியே அரிபயங் கரனை வாளால் குத்திக் கொன்றாள். பிரதாபன் புவன சுந்தரியைக் கொல் லவே எண்ணிஇருந்தான். ஆனால் அவளது அழகு அவனை அவ்வாறு



செய்யாமல தடுத்து விட்டது. அவன் புவன சுந்தரியை அழைத்துக் கொண்டு தன் கப்பலுக்கு சென்றான்.

பிரத்தியாமயன் ட்ரோஜனாக இருந்த போதிலும் கிரேக்கர்களுக்கு உதவி புரிந்து வந்தான். அதை மறந்து விட்ட சில கிரேக்க வீரர்கள் அவனது மூன்று புதல்வர்களில் ஒருவனைப் படுகாயப்படுத்தி விட்டார்கள். இன்னொருவனைத்தெருக்களில்துரத்திக் கொண்டு ஓடினார்கள். ஆனால் ரூப தரன் குறுக்கிட்டு அந்த இரு புதல்வர்களையும் காப்பாற்றினான். அது மட்டுமல்ல பிரத்தியாமயனின் வீட்டு வாசலில் ஒரு சிறுத்தைப் புலியின் தோலைக் கட்டி அந்த வீட்டை எந்த கிரேக்க வீரனும் தாக்கக் கூடாது என்றும் அறிவித்தான்.

அதுபோல பிரசம்சனின் வீட்டு வாசலிலும் அவன் ஒரு சிறுத்தைப் புலியின் தோலைக் கட்டி அந்த வீட்டையும் கிரேக்கர்கள் தாக்கக் கூடாது என அறிவித்தான். ட்ராய் நகரில் கிரேக்கர்கள் படுகொலையை ஆரம்பிக்கவே வர்த்தனனின் மகளான ஜாலினி அறிவு தேவதையின் ஆலயத்திற்குள் ஓடி ஒளிந்து கொண்டாள். ஆனால் கிரேக்கர்கள் அவளைப் பிடித்து இழுத்துக் கொண்டு சென்றார்கள்.

ட்ரோஜன் ஸ்திரீகள் கிரேக்கர்களிடம் அகப்பட்டு அவர்களிடம் சிறைப் படுவதைத் தவிர வேறு வழியே இல்லாமல் போயிற்று. ஜாலினியை



ராஜராஜன் தன்னிடம் இருக்க வைத்தான்.

படுகொலைக்குப் பின் கிரேக்கர்கள் ட்ராய் நகரில் கொள்ளை அடிக்கலானார்கள். வீடுகளுக்குத் தீ மூட்டினார்கள். தேவதைகளுக்கு பல ட்ரோஜன்களை பலியிட்டார்கள். வீடுகளை இடித்துக் கிடைத்தவற்றைத் தமக்குள் பங்கு போட்டுக் கொண்டார்கள்.

வீரசிம்மனின் மனைவி நவயோதனின் உடமையானாள். அவளுக்கு ஒரு இளம் குழந்தை இருந்தது. அதனை கிரேக்கர்கள் ரகசியமாகக் கொன்று விட்டார்கள்.

வஜ்ஜிரகாயன்விரும்பிய பிரமோதினியின் எதிர்காலம் பற்றி கிரேக்கர்



களிடையே பெருத்த வாக்குவாதம் மூண்டது. ட்ராய் நகரம் வீழ்ச்சியுற்றதும் அவளைத் தன் சமாதியில் பலியிட வேண்டுமென வஜ்ஜிரகாயன் தன் நண்பர்களிடம் கூறி இருந்தான். அவன் அண்மையில் அவனது மகனின் கனவிலும் மற்றும் சிலரின் கனவுகளிலும் தோன்றி பிரமோதினியை பலியிடாவிட்டால் அவர்கள் தம் நாட்டிற்குத் திரும்பிச் செல்ல காற்று அனுகூலமாக வீசாது என்று பயமுறுத்தினான்.

பிரமோதினியை வஜ்ஜிரகாயனின் சமாதியில் பலியிடாவிட்டால் அது பெரும் அபசாரமாகும் எனக் காம்சுகனும் கூறினான். ஆனால் ராஜராஜனோ அவளை பலியிடக் கூடாது எனக் கடுமையாக எதிர்த்தான். இதனால் பலத்த வாக்குவாதம் மூண்டது. நிலமை கட்டுக்கடங்காது போய் விடுமோ எனப் பயந்த ரூபதரன் ராஜராஜனிடம் பெரும்பாலானோரின் அபிப்பிராயத்தை மதித்து நடக்கும்படி கேட்டுக் கொண்டான்.

பிரமோதினியை பலியிடுவது என்பது உறுதியாயிற்று. அவளைக் கொண்டு வரவேண்டிய பொறுப்பு ரூபதரனிடம் ஒப்படைக்கப்பட்டது. பலியை நிறைவேற்ற வஜ்ஜிரகாயனின் மகன் நவயோதனே தயாராக நின்றான். கிரேக்க வீரர்கள் வஜ்ஜிரகாயனின் சமாதியைச் சுற்றிலும் நின்றனர். பிரமோதினி அழைத்து வரப்பட்டதும் அவளை அந்தச் சமாதியில் பலியிட்டார்கள். அதன்பின் முறைப்படி அவளுக்கு ஈமச்சடங்குகள் நடந்தன.

பிரமோதினி பலியிடப்பட்டதும் காற்று கிரேக்கர்கள் பயணமாவதற்கு அனுகூலமாக வீசியது. அவர்கள் சற்றும் தாமதிக்காமல் கப்பல்களில் ஏறித் தம் நாடுகளுக்குத் திரும்பிச் சென்றனர்.

வர்த்தனனின் மனைவி ரூபதரனுக்குக் கிடைத்தாள். ஆனால் அவள் வயிறு எரிந்து கிரேக்கர்களை எல்லாம் கடுமையாகச் சபித்தாள். அவள் வாயை மூட முடியாது எனக் கண்ட கிரேக்கர்கள் அவளைக் கொன்று கடலில் தூக்கி எறிந்தார்கள். அவர்கள் திரும்பிச் சென்ற போது ஒன்றாகச்

செல்லாமல் பிரிந்து சென்றார்கள். சிலர் தம் நாடுகளுக்கு போய்ச் சேரவும் இல்லை.

ட்ராயை விட்டுப் போகு முன் ராஜராஜனுக்கும் அவனது தம்பிக்குமிடையே பெரும் தகராறு ஏற்பட்டது. ''காற்று அனுகூலமாக இருப்பதால் இப்போதே கிளம்பி விடலாம்'' என்றான் பிரதாபன். ஆனால் ராஜராஜனோ ''அறிவு தேவதைக்கு பலிகள் கொடுத்து அவளை மகிழ்விக்க வேண்டாமா?'' என்று கேட்டான்.

பிரதாபனோ ''நாம் ஏன் அத்தேவதைக்கு பலி கொடுக்க வேண்டும்? அதற்கும் நமக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. அது நம் எதிரிகளின் தேவதை'' என்றான். இந்தக் கருத்து வேறுபாட்டால் இருவரும் பிரிந்து போயினர். பின்னர் அவர்கள் ஒன்று சேரவே இல்லை.

ராஜராஜனும், நவயோதனும் கிழவனான நவத்யோதனும் நேராகத் தம் நாட்டை அடைந்தார்கள். பிரதாபனோ காற்று அனுகூலமாக இராததால் கப்பலில் அங்குமிங்கும் அலைந்து புவனசுந்தரியுடன் எகிப்து நாட்டை அடைந்தான். அங்கு பல ஆண்டுகளைக் கழித்து விட்டு அவன் தன் நாட்டை அடைந்தான். அப்போது ராஜராஜனை யாரோ கொன்று விட்டார்கள்.

மரக் குதிரைத் திட்டம் கொடுத்து ட்ராய் நகரை வீழ்த்திய ரூபதரன் தன் நாட்டை அடைவதற்குப் பத்து ஆண்டுகள் பிடித்தன. அவனது பயண அனுபவங்களோ விசித்திரமானவை.

இவ்வாறாக ட்ராய் நகரம் வீழ்ச்சியுற்றது. வீழ்ச்சிக்கு முன் அது உலகின் தலை சிறந்த நகரங்களில் ஒன்றாகத் திகழ்ந்து இருந்தது. ஆனால் கிரேக்கர்கள் அதனை அழித்த பிறகு அதனை மீண்டும் புதுப்பிக்க எவ்வளவோ மன்னர்கள் முயன்றார்கள். பிரசம்சனின் சந்ததியார் அதனை ஆண்டு வந்த போதிலும் அந்நகருக்கு முந்தைய சிறப்பு ஏற்படவே இல்லை.

**(முற்றுப் பெற்றது)**



## அம்புலிமாமா செய்திகள்

### 14 ஆண்டு சைகிள் பயணம்

அகமதாபாதைச் சேர்ந்த தாஹீர் மத்ராஸ் வாலா என்பவருக்கு ஆறு மாதகாலம் சைகிளில் பயணம் செய்து வர அவரது பெற்றோர்கள் அனுமதி அளித்தனர். இது 1981ல். அப்போது அவரது வயது 18. ஆனால் வீட்டை விட்டுக் கிளம்பிய அவர் ஆறு மாதங்களுக்குப் பிறகு வீட்டிற்கு வராமல் பதிநான்கு ஆண்டுகள் சில நாடுகளில் சைகிளிலேயே பயணம் செய்தார். அவர் தாம் சென்ற இடங்களைப் பற்றிய தகவல் சேகரித்தும் புகைப்படங்களும், வீடியோப் படங்களும் எடுத்துக் கொண்டும் திரும்பி வந்துள்ளார். அவர் தம் அனுபவங்களை எழுதிப் புத்தக வடிவில் வெளியிட்டால் உபயோககரமாக இருக்கும்.

### வெள்ளி பைபிள்

ஸ்டாக்ஹோமின் ஓஸ்லோ பல்கலைக் கழகத்திலிருந்த பைபிளின் மேலட்டையும் இரண்டு பக்கங்களும் கடந்த ஏப்ரல் மாதத்தில் காணாமல் போயின. ஒரு மாதத்திற்குப் பிறகு ஸ்டாக்ஹோம் மெயின் ரயில்வே ஸ்டேஷன் லாக்கரில் அவை பத்திரமாக உள்ளன என்று தொலைபேசி வாயிலாகத் தகவல் வந்தது. அவை புகழ்பெற்ற வெள்ளி பைபிளில் இருந்தவை. ஆறாவது நூற்றாண்டைச் சேர்ந்த அப்புனித நூலின் பக்கங்களில் எழுத்துக்கள் வெள்ளியில் பொறிக்கப்பட்டவை. சில எழுத்துக்களுக்கும் பக்க ஓரங்களுக்கும் தங்கப் பூச்சும் கொடுக்கப்பட்டிருந்தது. 17வது நூற்றாண்டில் ஸ்வீடிஷ் படை வீரர்கள் செக்கோஸ்லாவாகியாவிலுள்ள பிராக் நகரிலிருந்து அந்த பைபிளைத் திருடி எடுத்து வந்தார்களாம். கோதிக் மொழியில் எழுதப்பட்ட அந்த நூல் அப்போது முதல் ஸ்வீடனில்தான் உள்ளது.

### நான்கு வயது சிறுவனின் துணிச்சல்

பம்பாய் தெருக்களில் சன்னி கபோடியா என்ற நாலு வயதுச் சிறுவன் மே 19ல் காரை ஓட்டி வியக்க வைத்தான். மே 7ல் அவன் கல்கத்தாத் தெருக்களிலும் அதற்குமுன் அகமதாபாத், நௌகாம், கவாஹட்டி, சூரத் ஆகிய நகரத் தெருக்களிலும் இச்சிறுவன் காரை ஓட்டி எல்லோரையும் வியக்க வைத்தான். இவன் இப்போது நர்ஸரிப் பள்ளியில்தான் படிக்கிறானாம். 1993ல் ஹைதராபாத்தில் நான்கு வயது ஜூஹி அகர்வால் காரை ஓட்டினான் என்று அவன் பெற்றோர்கள் கூறியதும் அவன் "என்



னால் மாத்திரம் முடியாதா?" எனக் கூறி விடா முயற்சியுடன் தன் தந்தையிடம் காரை ஓட்டக் கற்றுக் கொண்டு பல நகரத் தெருக்களில் கார் ஓட்டிக் காட்டினான். இவனது இச்சாதனை கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற உள்ளது.



# ஆசைக்கும் ஓர் அளவு!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர இரவில் நீ இப்படி விடாப் பிடியாகஒருசெயலில்இறங்கிஇருப்பது பாராட்டத்தக்கதே. ஆனால் இந்த முயற்சி யாராவது மந்திரவாதிக்கோ அல்லது மந்திரதந்திரங்கள் தெரிந்தவனுக்கோ உதவுமானால் அதனால் நீ பெறுத்த ஏமாற்றமே அடைவாய். ஏனெனில் இப்படிப்பட்டவர்களின் செயல்களால் பொதுமக்கள்தாம் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். இதைவிளக்க உனக்கு ஒருகதைகூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகு காலத்திற்கு முன் கிழக்குக்

## வேதாளம் சொல்லும் கதை



கடற்கரையிலிருந்த ஒருகிராமத்தில் பத்திரிநாதன்என்றபணக்காரன்இருந்தான். ஆனால் அவனது பணமெல்லாம் கரைந்து போய்க் கடனும் ஏற்பட்டது. அவனுக்கு மிஞ்சியது அவன் வசித்து வந்த வீடுதான். அவனது மகன்கேதாரநாதனுக்கு இருபது வயதாகும் போது பத்திரிநாதன் நோயுற்றுப் படுத்துக் கிடந்தான்.

ஒருநாள் அவன் தன் மகனை அழைத்து ''மகனே. நான் அதிக ஆசைப்பட்டதால் எனக்கு இந்த கதி ஏற்பட்டது. நீ என் மாதிரி ஆசைப்பட்டு இம்மாதிரி ஆகிவிடக் கூடாது. உனக்கு இருபதாவது ஆண்டு நிறைவடையும் நாள் ரதசப்தமி திதியாகும். அது இன்றுதான். நீ குளித்து விட்டு வா. ஒரு விஷயம் சொல்ல வேண்டும்'' என்றான்.

கேதாரநாதன் எருக்க இலையைத் தேடி பறித்துத் தலையில் வைத்து குளித்து விட்டு வரத் தாமதமாகியது. அதற்குள் பத்திரிநாதன் இறந்து விட்டான். கேதாரநாதனும் அவன் தாயும் 'ஓ'வெனக் கதறி அழுதார்கள். அது கேட்டு அக்கம்பக்கத்தவர் வந்து பத்திரிநாதன் இறந்தது கண்டு தகனக் கிரியைகளுக்கான ஏற்பாடுகளைச் செய்து, செய்ய வேண்டியதைக் கேதாரநாதனைச் செய்ய வைத்தனர்.

மறுநாள் காலை கடன் கொடுத்தவர்களெல்லாம் பத்திரிநாதனின் வீட்டிற்கு வந்து கேதாரநாதனிடம் அவன் தந்தை வாங்கிய கடனை அப்போதே தீர்க்கும்படி நிர்பந்தப்படுத்தினார்கள். அதற்குக் காரணம் பத்திரிநாதன் அவர்களிடம் மறுநாள் அவர்களது கடன் தொகைகளைக் தன் மகன் கேதாரநாதன் கொடுத்து விடுவான் என்று கூறி இருந்ததுதான்.

அப்போது கேதாரநாதனுக்குத் தன் தந்தை இறப்பதற்கு முன் ஏதோ சொல்ல நினைத்தது நினைவிற்கு வந்தது. அதைக் கடன்காரர்களிடம் கூறிச் சற்று பொறுக்குமாறு கேதாரிநாதன் அவர்களிடம் வேண்டிப் பார்த்தான். ஆனால் அவர்களோ இனி ஒரு நிமிடம் கூடப் பொறுக்க முடியாது என்று முரண்டு பிடித்தார்கள். கேதாரிநாதனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

அப்போது கடன் கொடுத்தவர்களில் காசிநாதன் என்பவன் மற்றவர்களிடம் ''நான் உங்கள் கடன் பாக்கிகளைக் கொடுக்கிறேன். அதற்கும் என் கடன் பாக்கிக்கும் இந்த வீட்டையும் இதிலுள்ள எல்லாப் பொருள்களையும் நான் என்னுடமை ஆக்கிக் கொள்ளப் போகிறேன். இதற்கு ஒப்புக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டான்.

எல்லாக் கடன்காரர்களும் அதற்கு ஒப்புக்கொண்டு அங்கிருந்து சென்றனர். காசிநாதனும் கேதாரநாதனிடம் ''உன் நிலையைக் கண்டு பரிதாபப் பட்டே இப்படிக் கூறினேன். நான் உன்தந்தை மற்றவர்களிடம் வாங்கிய கடனைத் தீர்த்தும் விடுகிறேன். இதற்கெல்லாம் எனக்கு உன் தந்தையிடமிருந்து கிடைக்க வேண்டிய கடன் பாக்கிக்காக இந்த வீட்டை என்னிடம் இப்போதே ஒப்படை. நீ நாளை காலைக்குள் இந்த வீட்டை விட்டுப் போய் விட வேண்டும். அப்படிப் போகாவிட்டால்தயைதாட்சணியம் பார்க்காமல் நான் உன்னையும் உன் தாயையும் வீட்டைவிட்டுத் துரத்தி விடுவேன்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

அப்போது கேதாரநாதனின் தாய் தன் மகனிடம் ''நமக்கு இப்போது போதாத காலம். இந்த வீட்டையும் இதிலுள்ள சாமான்களையும் மறு பேச்சுப் பேசாமல்காசிநாதனிடம் ஒப்படைக்கத்தான் வேண்டும். ஆனால்



ஒரேஒருபொருளைமட்டும்விட்டுச் செல்ல எனக்கு மனம் இல்லை. பரண் மீதுஒருபழையபெட்டி இருக்கிறது. அதை மட்டும் எடுத்துக் கொண்டு இன்றிரவே இந்த ஊரை விட்டே போய் விடலாம். அது வம்ச பரம்பரையாக நம் குடும்பத்தில் இருந்து வருவது'' என்றாள். கேதாரநாதனும் பரண் மீது ஏறிப் பழைய மரப் பெட்டியைத் திறந்து பார்த்தான். அதில் ஒரு சிறு புத்தகம் மட்டுமே இருந்தது. வேறு எதுவும் இருக்கவில்லை.

கேதாரநாதன் அந்தப் புத்தகத்தை எடுத்துப் பிரித்துப் பார்த்தான். அதில் அவனது குடும்ப வரலாறு இருந்தது. கேதாரநாதன் பிறக்கும் வரை குடும்பத்தில் நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம்



அவரிடம் பேச்சு கொடுத்தவாறே பத்ரிநாராயண மந்திரத்தை மூன்று முறை உச்சரித்தான். காசிநாதனும் அவனிடம்அன்பாகப்பேசி ''உனக்கு என்ன வேண்டுமோ கேள். நான் கொடுக்கிறேன்'' என்றார்.

கேதாரநாதனும் ''என் எல்லாக் கடன்களையும் தீர்த்து விடுங்கள்'' என்றான். அவரும் ''பகவான்எனக்கு ஒரு குறையும் வைக்கவில்லை. என்னிடம் நிறையப் பணம் இருக்கிறது. அதனால் உன் கடன்களை எல்லாம் நானே தீர்க்கிறேன். உன் வீடும் எனக்கு வேண்டாம். நீ அதில் சுகமாக இருக்கலாம்'' என்றார். அவர் தாம் கூறியபடியே செயலிலும் செய்து காட்டினார்.

எழுதப்பட்டிருந்தன. அதன் பிறகு அதில் பத்ரிநாராயணம், பத்ரிநாராயணம், பத்ரிநாராயணம் என்ற மந்திரம் மூன்று முறைகள் எழுதப்பட்டிருந்தது. இதனை ஒருவன் முன் நின்று ஜெபித்தால் அவன் நாம் கேட்டதைக் கொடுப்பான் என்றும் எழுதப்பட்டிருந்தது. இதன்பிறகு அப்புத்தகத்தில் வேறு எதுவும் எழுதப்படவில்லை. ஆனால் அந்த மந்திரம் பற்றி வேறு யாரிடமும் கூறக்கூடாது என்று மட்டும் எச்சரிக்கப்பட்டிருந்தது.

தன் தந்தை இறக்குமுன் இதைத் தான் கூற விரும்பினார் என கேதாரநாதன் ஊகித்து விட்டான். அவன் உடனேபரணிலிருந்துஇறங்கிநேராகக் காசிநாதன் வீட்டிற்குப் போய்

திடீரென காசிநாதர் மனம் ஏன் மாறியது என்று கேதாரநாதனின் தாய் எண்ணி ஆச்சரியப்பட்டாள். அது பற்றி அவள் தன் மகனிடம் கேட்டாள். அவனோ தனக்குத் தெரியாது எனக் கூறினான். வீடு கிடைத்தாலும் அன்றாட தேவைக்குப் பொருள்கள் வேண்டுமே. கேதாரநாதன் மளிகைக் கடைக்காரன் முன் போய் பத்ரிநாராயண மந்திரத்தை ஜெபிக்கவே கடைக்காரன் அவனுக்கு வேண்டிய சாமான்களைக் கொடுத்து அனுப்பினான்.

ஒரு நாளிரவு கேதாரநாதன் வீட்டினுள் ஒரு திருடன் நுழைந்து கத்தியைக் காட்டி தாயையும் மகனையும் மிரட்டினான். அப்போது கேதாரநாதன் பத்ரிநாராயண மந்திரத்தை

மும்முறை உச்சரிக்கவே திருடன் கத்தியை போட்டுவிட்டு ஓடியே போய்விட்டான்.

இதைக் கண்ட கேதாரநாதனின் தாய் ''எல்லாமே ஆச்சரியமாக இருக்கிறது. உன்னைக்கண்டு திருடன் ஓடுகிறான். ஊரில் எல்லேரும் எனக்கு உதவுகிறார்கள். இதற்கெல்லாம் என்ன காரணம்? நீ ஏதாவது வசீகர மந்திரம் கற்று வைத்திருக்கிறாயா?'' என்றாள். அவனோ ''இல்லை அம்மா. அப்பாவின் ஆத்மாதான் இப்படியெல்லாம் செய்து நம்மைக் காப்பாற்றுகிறது'' என்று கூறித் தப்பித்தான்.



கேதாரநாதன் சுகமாக வாழ்ந்து வரலானான். எதையும் பத்ரிநாராயண மந்திரம் கொண்டு அடைந்து வரலானான். ஊரில் அவனுக்குத்தான் பெரும் மதிப்பு. இப்படி இருக்கையில் அவ்வூருக்கு தபோநிதி என்ற முனிவர் வந்தார். அவர் எல்லோர் குறைகளைத் தீர்த்தார். நோய்களைப் போக்கினார். அவர் மகிமை வாய்ந்தவர் என ஊரே கொண்டாடியது.

கேதாரநாதன் அவரைப் பற்றி அறிந்ததும் அவரைத் தன் மந்திரத்தால் வசப்படுத்திக் கொள்ள நினைத்தான். எனவே அவன் அவரைக்கண்டு பத்ரிநராயண மந்திரத்தை ஜெபித்தான். தபோநிதியும் அவனைக்கண்டு ''அதிர்ஷ்டசாலியப்பா நீ! உனக்கு என்னால் என்ன ஆக வேண்டும்?'' என கேட்டார். கேதாரநாதனும் ''சுவாமி! எனக்கு எல்லாமே எளிதில் கிடைத்து விடுகிறது. இப்போது எனக்கு உங்களுக்கு உள்ள அபூர்வ சக்திகளே தேவை'' என்றான்.

தபோநிதியும் சிரித்தவாறே ''முதலில் என் கதையைக் கேள்'' எனக் கூறிச் சொல்லலானார்.

''இந்த உலகின் சக்கரவர்த்தியாக ஆக நான் ஆசைப்பட்டேன். அதனால் இமயமலைக்குப் போய் கடுந்தவம் புரிந்தேன். கடவுளும் என்முன் தோன்றவே அவரிடம் என் விருப்பத்தைத் தெரிவித்தேன். அவரோ ''இப்போதுள்ள சக்கரவர்த்தி மிகவும் நல்லவர். எனவே நீ அதைக் கேட்காதே'' என்றார்.

அப்போது நான் ''நானும் நல்ல



வன்தானே'' என்றேன். கடவுளும் ''அதற்கு அத்தாட்சி இல்லை. நீ சக்கர வர்த்தி ஆக வேண்டும் என்று தவம் செய்தாய். அதற்கு தவம் புரிவது சரி யான வழியல்ல. உழைப்பும், சக்தி யும், சாமர்த்தியமும் கொண்டே அப் பதவியைப் பெற வேண்டும். தவத் தால் அல்ல'' என்றார்.

''அப்படியானால் நான் செய்த தவம் வீண்தானா?'' என்று கேட் டேன். கடவுளும் ''இல்லை. உனக்கு சில அரிய சக்திகளை அளிக்கிறேன்'' என்றார். ''அப்படியானால் அந்த சக்தி களைக் கொண்டு நான் சக்கரவர்த்தி ஆகி விடுகிறேன்'' என்று கூறினேன். கடவுளும் ''ஒருவன்தன் சக்தியைத் தன் தேவைகளுக்கு மட்டுமே பயன் படுத்திக் கொள்ள வேண்டும். தேவைக்கு மேல் ஆசைப்பட்டால் அந்த ஆசையை விடப் பத்து மடங்கு திருப்பிக்கொடுக்க வேண்டி வரும். நாம் யாரிடமிருந்தாவது ஒரு பயன் பெற்றால் அதைத் திருப்பிக் கொடுக் கும் மனமும் கொண்டிருக்க வேண் டும். அப்படி இல்லாவிட்டால் அவன் அடைந்ததைப் போல பத்து மடங்கு என்றாவது இழக்க வேண்டியே வரும். என்னிடம் வரம் கேட்ட முனிவர்களெல்லாம் மகான்களாக ஆகி விட்டார்கள். அரக்கர்களோ அழிந்தார்கள். எனவே தவம் செய்து அரிய சக்தி பெறுவது சுயநலத்திற்காக அல்ல. தவம் கடவுளை அடையச் செய்வது. இதை நினைவில் கொள்ள வேண்டும்'' என்றார்.

அப்போது நான் அவரிடம் என்னை உடனேயே அவரோடு சேர்த் துக் கொள்ளும்படி வேண்டினேன். கடவுளும் ''பிறந்த ஒவ்வொரு மனித னாலும் உலகிற்கு ஏதாவது ஒரு நன்மை செய்தாக வேண்டியுள்ளது. நீ இதுவரை எந்த நன்மையும் செய்ய வில்லை. நீ நன்மைகளைச் செய்து விட்டு வந்தால் உன்னை என்னோடு ஐக்கியப்படுத்திக் கொள்கிறேன்'' என்று கூறிவிட்டு மறைந்தார்.

அது முதல் ஊர் ஊராகச் சென்று நான் மக்களுக்கு நன்மை புரிந்து வரு கிறேன்''.

தபோநிதி தம் கதையை இப்படிக் கூறியதும் கேதாரநாதனுக்கு இது

வரை தான் செய்து வந்த தவறு புரிந்தது. பத்ரிநாராயண மந்திரத்தால் பலரிடமிருந்து அவன் பல நன்மைகளை அடைந்து வந்தான். தன் தந்தையும் இவ்வாறு பல நன்மைகளை அடைந்து பிற்காலத்தில் அதற்குப் பன்மடங்கு இழந்தார் என்பதை கேதாரநாதன் உணர்ந்தான். இதற்குக் காரணம் அதிகமாய் ஆசைப்பட்டதே எனவும் அவன் தெரிந்து கொண்டான். அதனால்தான் அவர் வாழ்வின் முடிவில் கடனாளியாக ஆனார் என்பதும் அவனுக்கு விளங்கியது. அவனது தந்தை இறக்கு முன் ''ஆசையே என் அழிவுக்குக் காரணம்'' எனப் கூறியதும் அவன் நினைவிற்கு வந்தது.



தானும் தன் தேவைக்கு மேல் பிறரிடமிருந்து நன்மைகளை அடைந்ததால் தன் தந்தையின் கதியே தனக்கும் வரும் என அவனுக்கு நன்கு தெரிந்து விட்டது.

இப்படி யோசித்த கேதாரநாதனை தபோநிதி பார்த்து ''அப்பனே! உன்னிடம் வசீகர சக்தி ஏதோ உள்ளது. நீ கேட்டதைக் கொடுக்கும் வரை நான் இங்கிருந்து போகப்போவதில்லை'' என்றார். கேதாரநாதனும் ''சுவாமி! தாங்கள் சக்கரவர்த்தி ஆக வேண்டுமென எண்ணித் தவம் செய்தீர்கள். ஆனால் அந்தத் தவத்தால் கிடைத்த அரிய சக்திகளைக் கொண்டு எல்லோருக்கும்நன்மைபுரிந்துவருகிறீர்கள். இதனால் இப்போது உங்களுக்குச் சக்கரவர்த்தி ஆகும் தகுதி கிடைத்து விட்டது. ஆனாலும் நீங்கள் சக்கரவர்த்தியாகவிரும்பவில்லை. எனக்கு சக்கரவர்த்தியாக வேண்டும் என்ற ஆசை இல்லை. ஆனால் என்னை இந்நாட்டு மன்னனாக ஆவதற்கு மட்டும் உதவுங்கள்'' என்று வேண்டினான்.

தபோநிதியும் ''கடவுளின் எச்சரிக்கையை மறந்தாயா?'' எனப் கேட்கவே கேதாரநாதனும் ''இல்லை. இப்போதுள்ள மன்னனை ஒழிக்கச் சொல்லவும் இல்லை. இந்த மன்னனுக்கு ஆண் குழந்தை எதுவும் பிறக்கவில்லை. ஒரே மகள்தான் இருக்கிறாள். அவளுக்கு சுயம்வரம் நடத்த மன்னன் ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறான். அந்த சுயம்வரத்தில் நான் வெற்றி பெற்று அரசகுமாரியை

மணக்கச் செய்ய வேண்டும்'' என்றான்.

தபோநிதியும் ''சரி. இப்போது உன் வாழ்வால் நன்மை ஏற்படப் போகிறது. நீ வேண்டியபடி நடக்கும். நானும் இனி கடவுளோடு ஐக்கியமாகி விடுகிறேன்'' எனக் கூறினார்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! தபோநிதி தன் தவ சக்தியைக் கொண்டு கேதாரநாதனை மன்னனாக்கியது சரியா? கேதாரநாதனின் செய்கைகளெல்லாம் சுயநலம் கொண்டவையே. இப்படிப்பட்டவன் நாட்டின் மன்னனானால் அந்நாடு என்ன பாடுபடும்? தபோநிதி இதை அறிந்திருந்தும் ஏன் அவன் விரும்பியதை அளித்தார்? இக் கேள்விகளுக்கு பதில்கள் தெரிந்திருந் தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''தபோநிதி எவ்விதத்தவறும் செய்யவில்லை. அவருக்குக்கேதாரநாதனைப் பற்றி நன்கு தெரியும். அவனது சுயநலத்தைப் போக்கவே அவர் தம் கதையை அவனுக்குக் கூறினார். கேதாரநாதனின் தந்தையும் இறக்கு முன் தன் ஆசையே தன் அழிவிற்குக் காரணம் என்று கூறியதும், தபோநிதியின் போக்கும் கேதாரநாதனின் மனதை மாற்றி விட்டது. ஒரு நன்மை அடைந்தால் அதன் பதின்மடங்கு திருப்பி தர வேண்டிவரும் என்பது அவன் மனதில் பதிந்து விட்டது. இதற்கு நிறைய பணம் தேவை. தான் மன்னனானாலே இது முடியும் என எண்ணி அவன் தபோநிதியிடம் அவ்வாறு கேட்டான். தபோநிதியும் அவனது மனதைப் புரிந்து கொண்டே அவன் கேட்டதைக் கொடுத்தார். அவரது கணிப்பு சரியே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# மத்திய இந்தியக் கோட்டைகள்

கருத்து: **மீரா உக்ரா** ◆ படங்கள்: **அரித்ரா**

**ம**த்தியப் பிரதேசத்தின் வடமேற்குப் பகுதியில் மாண்டு கோட்டை உள்ளது. முன்பு மண்டவ துர்க்கம் எனப் பெயர் பெற்றிருந்த இதனைப் பார்மார் மன்னர்கள் 12வது நூற்றாண் டில் புதுப்பித்தார்கள்.

இப்பகுதியை கி.பி. 1550ல் ஆண்ட சுல்தான் பாஜ் பகாதூர் இசைப்பிரியன். சிற்பக் கலையை ஆதரிப்பவன். புகழ்பெற்ற பாடகி ரூபமதிக்காக இவன் கட்டிய மாளிகை மிக அழகானது. அதனருகே அழகிய நர்மதை ஓடுகிறது.



மாண்டு



ஒருமுறை ஜஹாங்கீர் சக்கரவர்த்தி அங்கு ஏழு மாதங்கள் தங்கி இருந்தார். அவர் தன் மனைவி நூர்ஜஹானுக்காக 198 படிகள் கொண்ட ஒரு அழகிய மாளிகையைக் கட்டினார். நூர்ஜஹான் ஒவ்வொரு படி மீது ஏறும் போது அவளது காலடியில் இரண்டு அஸர்பிகளை (தங்க நாணயங்கள்) போடுவார்களாம்.



கி.பி. 525ல் சூரஜ் சென்க்வலிவயரென்ற பெயரில் குவாலியர் கோட்டை கட்டப்பட்டது. செங்குத்தான மலை மீது கட்டப்பட்ட இக்கோட்டை தோமர் மன்னர்களின் காலத்தில் (1388–1518) மிக உயர் நிலையில் இருந்தது.

தோமர மன்னர்களில் முக்கியமான மான்சிங் புகழ்பெற்ற மன்மந்திரை நிர்மாணித்தார். நான்கு மாடிகளைக் கொண்ட இந்த மாளிகையின் இரண்டு அடுக்குகள் தரை

மன்மந்திர், குவாலியர்

மட்டத்தின் கீழ் கட்டப்பட்டுள்ளன. அவர் இசையையும், சிற்பக் கலையையும் பெரிதும் ஆதரித்தார். பிரபல இசையாளர் மகம்மது கௌஸூம் அவரது புகழ்பெற்ற சீடர் தான்சேனும் குவாலியரில்தான் இருந்து வந்தார்கள். அங்குதான் சிறப்பு இசை பாணியான 'குவாலியர் கரானா' என்பது தோன்றியது



▲ தான் சேன் சமாதி



◄ ஆதிநாதர் விக்கிரகம்

ஒரு தலை வாசலருகே ஒரு பாறை மீது ஜைன தீர்த்தங்கர்களின் பெரிய சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. அதில் ஆதிநாதரின் விக்கிரகத்தின் உயரம் 19 அடியாகும்.

பிரிட்டிஷாருக்கு எதிராக 1857ல் நடந்த போராட்டத்தில் படைவீரர்கள் ஜான்ஸிராணி லட்சுமிபாயுடனும் தாந்தியா தோப்புடனும் சேர்ந்தனர். அவர்கள் 1858ல் குவாலியர் கோட்டையை கைப்பற்றி பிரிட்டிஷாரை ஆதரித்த சிந்தியா மன்னனை ஆக்ராவிற்கு விரட்டினார்கள். ஆனால் அதன் பின் சர். ஹ்யூ ரோஜ் படைகளோடு குவாலியர் வந்து போர் புரியவே ஜான்சி ராணி லட்சுமி பாய் 1858 ஜூன் 17ல் அப்போரில் வீர மரணமுற்றார். அவரது உடலைத் தகனம் செய்த இடத்தில் இன்றும் அவரது சமாதி உள்ளது.

மத்திய இந்தியப் பகுதியில் சுனார் கோட்டை ரோஹிதாஸ்கட், கலிஞ்ஜர் கோட்டைகள் மிகப் பலமானவை என்றும் வெல்ல முடியாதவை என்றும் புகழ் பெற்றிருந்தன. ஆனால் ஷேர்கான் (ஷேர்ஷா சூரி) இம்மூன்று கோட்டைகளையும் வெவ்வேறு வழிகளில் கைப்பற்றினான்.





சுனார் கோட்டை

உத்தரப் பிரதேசத்தின் கிழக்குப் பகுதியில் விந்திய மலைத் தொடரில்ஒருமலைஉச்சிமீது சுனார்கோட்டைநிர்மாணிக்க ப் பட்டிருந்தது.மலையின்ஒரு புறம் கங்கை நதி ஓடுவதால் எதிரிகள் அப்பக்கத்திலிருந்து படை எடுத்து வர முடியாது. 1531ல் சுபேதார் தாஜ்கானின் விதவையான பேகம் லாட் மாலிகாவை ஷேர் கான் மணந்து கொண்டதால் சுனார் கோட்டை அவனுக்குக் கிடைத்தது.

ஷேர்கான் வசமிருந்த சுனார் கோட்டையை 1538ல் ஹுமாயூன் கைப்பற்றியதால் ஷேர்கான் தான் இருக்க ஒருஇடத்தைத்தேடினான்.அவன்தனக்கும்தன்குடும்பத்தவருக்கும்ரோஹிதாஸ்கோட்டையில் புகலிடம் வேண்டும் எனக் கோரவே, அதன் ராஜபுத்திர மன்னன் அதனை ஏற்றான். 700 மூடு பல்லக்குகள் அக்கோட்டைக்குள் அனுமதிக்கப்பட்டன. கோட்டைக் காவலாளிகள் முதல் 50 பல்லக்குகளை மட்டும் சோதித்துவிட்டு ஆபத்து எதுவும் இல்லை என்று எல்லாப் பல்லக்குகளையும் கோட்டைக்குள் போக விட்டனர். அவ்வளவுதான்! சற்று நேரத்தில் அப்பல்லக்குகளிலிருந்த வீரர்கள் வெளியே குதித்து கோட்டையைக் கைப்பற்றி புகலிடம் கொடுத்த மன்னனையே கோட்டையை விட்டுத் துரத்தினார்கள். இவ்விதமாய் ஷேர்கான் கைமார் மலை மீது அமைந்திருந்த பலமான ரோஹிதாஸ கோட் டையைத் தன் வசப்படுத்திக் கொண்டான்.

சுனார், ரோஹரதாஸ் கோட்டைகள் எழுத்தாளர் தேவகி நந்தன் கத்ரிக்கு சந்திரகாந்தா, பூதநாத், குசுமகுமாரி போன்ற புதினங்களைப் படைக்க நிலைக்களமாக அமைந்தன.

ரோஹிதாஸ்கட்

விந்திய மலைப் பகுதியிலுள்ள கலிஞ்ஜர் கோட்டை நம் நாட்டு மிகப் பழைய கோட்டைகளில் ஒன்றாகும். கிரேக்க வரலாற்று ஆசிரியர் டோலமி இதனைக் காங்கோர் எனக் குறிப்பிடு கிறார்.

ஷேர்ஷா 1545ல் இதன் மீது படை எடுத்த போது சண்டேல் வம்ச மன்னன் கீர்த்தி சிம்மன் இதனை ஆண்டு வந் தான்.ஒருவருடகாலம்முற்றுகையிட டும் இக் கோட்டையை அவனது படை கள் கைப்பற்ற முடியாததால் படைத் தலைமையை ஷேர்ஷாவே தலைமை ஏற்றுத் தாக்குதலை நடத்தினான்.

கலிஞ்ஜர் கோட்டை

அவனது பீரங்கிப் படை வெடித்த குண்டு கோட்டைக் கதவைத் தாக்கி நேர் எதிரில் சிதறியது. அத் தீப்பொறி வெடி மருந்துகள் வைக்கப்பட்ட இடத்தில் விழவே அங்கு பெருத்த வெடிப்பு ஏற்பட்டது. அதில் ஷேர்ஷா படுகாயமுற்றான். ஆனால் அவனது படைகள் ஆவேசத்தோடு தாக்கிக் கோட்டையைக் கைப்பற்றி விட்டன. கீர்த்தி சிம்மன் கொல்லப்பட்ட போதிலும் ஷேர்ஷா தானடைந்த காயங்களால் இறந்து போனான்.

பிரயாகை அருகே கங்கையும் யமுனையும் சேரும் இடத்திலுள்ள அலகாபாத் கோட்டையை முகலாய சக்கரவர்த்தி அக்பர் கட்டினார். 1583ல் அங்கு 300 படகுகளில் வந்த அக்பர் நவம்பர் 4ல் 'இலஹாபாஸ்' (இலாஹா + ஆபாஸ்) என்று கடவுளின் நிலையம் எனப் பொருள் தரும் நகரை நிர்மாணித்தார். பள்ளத்தில வேகமாக ஓடி வரும் யமுனை, கங்கை நதிகள் கோட்டையைக் கட்டுவதில் சிரமம் ஏற்படுத்தின. ஆயினும முயன்று பத்து ஆண்டுகளில் ஆறு கோடி ரூபாய் செலவில் இக் கோட்டை கட்டி முடிக்கப்பட்டது.

1380லிருந்து மிளிர்ந்து வந்த கௌசாம்பி அசோக ஸ்தூபத்தை எடுத்து வந்து 1838ல் பிரிட்டிஷார் இக்கோட்டைக்குள் நிறுத்தி வைத்தார்கள்.

அலகாபாத் கோட்டை





# அரசுகவி ஆகாதே!

ஒரு ஊரில் தினகரன் என்ற கவிஞன் இருந்தான். அவன் மன்னனைப் புகழ்ந்து ஒரு காவியம் எழுதினான். அதனை மன்னனிடம் நேரில் கொடுத்து அவனது ஆதரவைப் பெறுவது என எண்ணிக் கொண்டு தன் ஊரை விட்டுக் கிளம்பினான். தலைநகரை அடைய குறுக்கு வழியில் சென்றால் விரைவில் போய் விடலாம் என்று எண்ணி அவன் அவ்வழியில் நடந்து சென்றான்.

அப்போது அவனை வழிமறித்து ஒருதிருடன் ''உன்னிடம் உள்ளதை எல்லாம் கொடுத்துவிடு'' என்று கத்தியைக் காட்டி மிரட்டினான். தினகரனோ ''அப்பனே! நான் ஒரு கவிஞன். கவிஞனிடம் பணம் எப்படி இருக்கும்? அவன் என்றும் வறுமையில் வாடுபவன்தானே. அவனது நூல்கள்தான் அவனது செல்வம். இப்போது என்னிடம் இந்த நூலைத் தவிர வேறு எதுவும் இல்லை. இதற்கு அரச சன்மானம் கிடைத்தால் திரும்பி வரும் போது அதில் கொஞ்சம் கொடுக்கிறேன்'' என்றான்.

அத்திருடனும் ''ஓ! நீ கவிஞனா? அப்படியானால் நீ கண்டிப்பாக எங்கள் தலைவரைப் பார்த்தேயாக வேண்டும். உன் கண்களைக் கட்டி அவர் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்கிறேன்'' எனக் கூறி அவனது கண்களைக் கட்டி கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போய் ஓரிடத்தில் நிறுத்தி கண் கட்டை அவிழ்த்தான். அங்கு திருடர்களும் கொள்ளைக்காரர்களும் இருப்பதை அவன் பார்த்தான். ஆனால் ஒரே ஒருவன் மட்டும் தூய ஆடைகளை அணிந்து கம்பீரமாக நிற்பதை தினகரன் கண்டான்.

திருடன் தினகரனை அவன் முன் நிறுத்தி ''இவன் ஒரு கவிஞனாம்'' என்று கூறினான். அவனும் தின

—பா.சு. வெங்கடராமன்—



க்ரனைப் பார்த்து ''என் பெயர் கலாசாகரன். எனக்குக் கவிதை என்றால் மிகவும் பிடிக்கும். கவிதை புனைய இந்தக் காடு ஏற்ற இடமாக உள்ளது. இந்த இயற்கைச் சூழ்நிலையில் நல்ல கவிதைகளைப் படைக்க முடியும். மனமும் திருப்தி அடையும். நீயும் இங்கேயே இருந்து விடு'' என்றான்.

தினகரனோ ''முடியாது. எனக்குப் பணம் வேண்டும். அதற்காகவே இந்த நூலை எழுதினேன். இதை மன்னனுக்குப் படித்துக் காட்டி நான் அரச சன்மானம் பெற விரும்புகிறேன்'' என்றான். அதுகேட்டு கலாசாகரன் ''அரசசன்மானமா? கவிஞர்கள் ஒரு போதும் அதை விரும்பக் கூடாது. மன்னர்கள் கவிஞர்களை மகா மட்டமான வேலையை செய்ய வைக்கிறார்கள்'' என்றான். தினகரனும் ''திருடர்களுக்கும் கொள்ளைக்காரர்களுக்கும் மத்தியில் வாழும் நீங்கள் மன்னர்களைப் பற்றி இப்படி விமர்சிப்பது தகாது'' என்றான்.

கலாசாகரனும் ''என்னைச் சுற்றி இருப்பவர்களைப் பற்றி நீ சரியாக அறியவில்லை. விரைவில் நீ உன் அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்வாய்'' என்றான். அன்றிரவு அவன் எல்லோரையும் உட்காரவைத்து கம்ப ராமாயணச் செய்யுள்களைக் கூறி விளக்கினான். அவர்கள் கேட்ட சந்தேகங்களுக்கெல்லாம் பதில் கூறி விளக்கினான்.

தினகரன் அதை எல்லாம் பார்த்தான். அதில் புதுமை எதுவும் இருந்ததாக அவனுக்குத் தெரியவில்லை. ஆலைஇல்லாதஊருக்குஇலுப்பைப் பூ சர்க்கரை என்பது போல அந்த இடத்தில் கலாசாகரன் எல்லோரிலும் மேலாகஇருப்பதாகஅவன்எண்ணினான். அன்றிரவு அங்கு நன்கு தூங்கிவிட்டு மறுநாள் அங்கிருந்து புறப்படலானான்.

அப்போது கலாசாகரன் ''உன்னைக் கண்டு பரிதாபப்படுகிறேன். கவிதை புனைய இதை விட நல்ல இடம் உனக்குக் கிடைக்காது. இங்கு நீ சுகமாக இருக்கலாம். அரச சபையில் இருந்தால் கஷ்டப்படுவாய்'' என்றான். ஆனால் தினகரன் அர

சனைக் காணப் போக தான் போவ தாக கூறவே கலாசாகரனும் ''சரி. இந்தக் காட்டைத் தாண்டியதும் வேப்பூர் வரும். அங்கே என் சீடன் சந்திரன் இருக்கிறான். அவனும் மாபெரும்கவிஞன். அவனைப்பார். வழிகாட்டுவான்'' என்று கூறி அனுப்பினான்.



வேப்பூரை அடைந்த தினகரன் சந்திரனைப் பற்றிப் பலரிடம் கேட்டும் சரியான தகவல் கிடைக்க வில்லை. முடிவில் அவன் மாடு மேய்ப்பவன் ஒருவனிடம் ''உனக்கு சந்திரன்என்றொருகவிஞனைத்தெரியுமா?'' எனக் கேட்டான். அவனோ ''நான்தான் சந்திரன். நீ யார்? என்ன வேண்டும்?'' என்று கேட்டான்.

தினகரனும் ''நீயா சந்திரன்? கலாசாகரனின்சீடனா நீ? மாபெரும்கவிஞன் நீ என்று அவர் சொன்னாரே'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான். அவனும் ''ஓ! உன்னைக் கலாசாகரரா அனுப்பினார்? அவர் எப்படி இருக்கிறார்? ஏதாவது புதிய காவியம் படைத்திருக்கிறாரா?'' என்று கேட்டான். தினகரனோ ''அவர் எழுது கிறாரோ என்னவோ எனக்குத் தெரியாது. ஆனால் புராணப் பிரசங்கம் மட்டும்தினமும்செய்கிறார். ஆமாம். நீ எப்படி அவரது சீடனானாய்? அதனால் உனக்கு என்ன பயன் ஏற்பட்டது?'' என்று சந்திரனிடம் கேட்டான்.

சந்திரனும் ''நான் ஏழை குடும்பத்தில் பிறந்தவன். எனக்கு சிறு வயதிலிருந்தே கவிதையில் மிகுந்த ஆர்வம். எனக்குத் தோன்றியதை எழுதிப் பறவைகளையும் மிருகங்களையும் கேட்க வைத்துக் கொண்டிருந்தேன். ஒருநாள் கலாசாகரர் இங்கு வந்தார். அவரது இராமாயணப் பிரசங்கம் கேட்டபின் அவரிடம் என் சந்தேகங்களைக் கேட்டு விளக்கம் தெரிந்து கொண்டேன். அவரிடம் நான் எழுதிய பாடல்களைப் பாடினேன். அவற்றைக் கேட்டு அவர் ''உன் கற்பனைத் திறன் அபாரம். நீ என்னோடு வந்து ஒரு வருடகாலம் இரு. நீ மாபெரும் கவியாகி விடுவாய்'' என்றார். நானும் அவருடன்சென்றுஒருவருடகாலம்



டோடு உள்ள மாப்பிள்ளை வேண்டும். நீ என் மகளை மணந்து கொண்டால் உன் தாய் தந்தை சுகமாக வாழ வழி செய்கிறேன். நீ எவ்விதத் தடையும் இல்லாமல் கவிதை புனையலாம்'' என்றார். நானும் அதற்கு ஒப்புக் கொண்டு அவரது மகளை மணந்து கொண்டேன். அவள் மிகவும் கர்வம் பிடித்தவள். எனக்கு ஆடு, மாடுகளை மேய்க்கும் வேலை கொடுத்தாள். இது எனக்கு மிகவும் வசதியாயிற்று. ஆடு மாடுகளை மேய விட்டு என் இஷ்டத்திற்குக் கவிதைகள் எழுதி வருகிறேன்''.

இவ்வாறு சந்திரன் கூறியதும் தினகரன் ''ஒருவேளை உன் கவிதை அரச சபையில் எடுபடாததால் அங்கு இருக்க முடியவில்லையோ? நான் போய் அரச சபையில் இடம் பெறுகிறேன் பார்'' என்றான். சந்திரனும் ''சரி சரி. நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். நீ நல்ல கவிஞனாக வேண்டும் என்றால் உனக்கு அது சரியான இடம் இல்லை. நீயோ அங்கேதான் போக வேண்டும் என்கிறாய். தலைநகரில் வேதகிரி என்னும் மகாகவி இருக்கிறார். அவரை நீ பார்த்தால் ஏதாவது பயன் ஏற்படலாம்'' என்று கூறி அனுப்பினான்.

தினகரனும் தலைநகரை அடைந்து வேதகிரியைத் தேடினான். அவர் ஊர் எல்லையில் ஒரு ஆசிரமம் அமைத்து அதில் நோயாளிகளைச் சேர்த்து அவர்களுக்குப் பணிபுரிவதைக் கண்டான்.

மொழியைப் பயின்று ஒரு காவியமும் புனைந்தேன். அவர் அதைப் பார்த்துவிட்டு என்னைப் பாராட்டி இப்படியே இலக்கியப் பணிபுரிந்து வா'' என்று கூறி அனுப்பினார்'' எனக் கூறி மேலும் தொடர்ந்தான்.

''நான் வீட்டை அடைந்த போது என் தந்தை நோயுற்றுப் படுத்திருப்பதைக் கண்டேன். வீட்டுப் பொறுப்பு என் மீது விழுந்தது. இனி கவிதை எழுத முடியாதே எனப் பயந்து தலைநகருக்குப் போய் அரச சபையில் இடம் பெற முயன்றேன். ஆனால் அங்குள்ள நிலவரம் கண்டு ஊருக்கே திரும்பி வந்து விட்டேன். அச்சமயம் இவ்வூரின் பணக்காரர் என்னைக் கூப்பிட்டனுப்பி ''எனக்கு வீட்

இதென்ன, கவிஞன் வேலையா இது என்று தினகரன் எண்ணி ஆச்சரியப் பட்டான்.

அவன் வேதகிரியைக் கண்டு பேசவே அவரும் அவனைப் பற்றிய விவரங்களை அறிந்து கொண்டார். அவர் அவனிடம் ''தம்பீ! கவிஞன் அரசசபையில் இருந்தால் விரைவில் எல்லோருக்கும் தெரிந்தவனாகி விடுவான். ஆனால் அரச சபைப் பணி நரகவேதனையைத் தரும் இதை அறிந்தே கலாசாகரர் காட்டில் வாழ்கிறார். சந்திரன் மாடுகளை மேய்க்கிறான். நான் இந்த ஆசிரமத்தில் இருக்கிறேன். சரி! நீ எழுதிய காவியத்தைக் காட்டு'' என்றார்.

தினகரனும் தான் மன்னனைப் புகழ்ந்து எழுதிய காவியத்தைக் கொடுத்தான். அவர் அதன் சில ஏடுகளைப் பார்த்துவிட்டு ''சரிதான். நீ இப்போதே அரசனின் அடிமையாகி விட்டாய். இதுபோதும் உனக்கு அரச சபையில் இடம் கிடைக்க'' என்றார். தினகரன் முகம் சிவக்க ''நான் இப்போதே அரசனின் அடிமையாகி விட்டேனா? அது எப்படி?'' என்று கோபத்தோடு கேட்டான்.

வேதகிரியும் ''நீ உன் படைப்பில் மன்னனைப் பற்றி ஒரேயடியாக புகழ்ந்திருக்கிறாய். அதில் வேறு எதுவுமே இல்லை. மன்னன் நீ எழுதிய புகழுரைகளுக்குச் சற்றும் அருகதை இல்லாதவன். இம்மாதிரியான புகழுரைகளை அடையவே மன்னர்கள் கவிஞர்களை நாடுகிறார்கள். இது படு மட்டமான செயல். இதனைச் செய்பவனும் செய்விப்பனும் கேடு கெட்ட கயவர்கள்'' என்றார்.

அப்போது தினகரன் விஷயத்தை புரிந்து கொண்டான். அவன் சிறிது காலம் தலைநகரிலேயே இருந்து பல உயரிய நூல்களைப் படித்துப் பல விஷயங்களைத் தெரிந்து கொண்டான். அதன்பின் மன்னனைப் பார்க்க முயலாமல் தன் ஊருக்கே திரும்பிச் சென்று நிம்மதியாக இருந்து பல கவிதைகள் புனைந்து பேரும் புகழும் பெற்றான்.





# எங்கே நிம்மதி?

பாலய்யா என்ற குடும்பஸ்தனுக்குத் தன் குடும்பத்தின் மீதே வெறுப்பு ஏற்பட்டது. அவன் வயதான தன் தாய் தந்தையரையும் மனைவி மக்களையும் விட்டு விட்டு ஊர் ஊராக அலைந்து திரிந்தான். அவன் ஒரு ஊரை அடைந்தபோது அங்கு சலசல வென ஓடும் ஆற்றையும் சுற்றிலும் பச்சைப் பசேலென்று இருக்கும் வயல்களையும் கண்டு மகிழ்ந்து போனான்.

அந்த அமைதியான சூழ்நிலையில் ஆனந்தாசிரமம் என்று இருப்பதைக் அவன் கண்டான். அதில் சதானந்தர் என்பவர் இருந்து சீடர்களுக்குக் கல்வி புகட்டி வந்தார். பாலய்யன் அந்த ஆசிரமத்திற்கு சென்று சதானந்தரை வணங்கி நின்றான்.

அவரும் ''நீ யாரப்பா? உனக்கு என்ன வேண்டும்'' என்று கேட்டார். பாலய்யனும் ''சுவாமி! நீங்கள் என்னை உங்கள் சீடனாக ஏற்க வேண்டும். நான் உங்களுக்குப் பணிவிடைகள் புரிந்து கொண்டு இங்கேயே இருந்து விடுகிறேன்'' என்றான். சதானந்தரும் அவனைக் கூர்ந்து கவனித்து ''நான் இங்கு கல்வி கற்க விரும்பும் பிரம்மச்சாரிகளையே ஏற்கிறேன். உன்னைப் பார்த்தால் பிரம்மச்சாரியாகத் தெரியவில்லையே? நீ குடும்பஸ்தனா?'' என்று கேட்டார்.

பாலய்யனும் ''சுவாமி! நான் பிரம்மச்சாரியல்ல. குடும்பஸ்தன் தான். மனைவி மக்கள் என்றெல்லாம் இருக்கிறார்கள். என் மனைவி வாயாடி. அவளுக்கும் என் தாயாருக்கும் எப்போது பார்த்தாலும் சண்டை தான். அவர்களுக்கிடையே நான் அகப்பட்டுக் கொண்டு முழிக்க வேண்டி இருக்கிறது. வீட்டில் நிம்மதியாக இருக்க முடியவில்லை. அதனால் சன்னியாசியாகி விடலாம்

—மகாதனபுரம் கிருஷ்ணன்—

என்ற எண்ணத்தோடு அதனை விட்டு வந்து விட்டேன். என்னைத் தங்களது சீடனாக ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும்'' என்று வேண்டினான்.

அவரும் ''சரி. நீ சில நாட்களுக்கு இங்கே இரு. பிறகு என் முடிவைச் சொல்கிறேன்'' என்றார். பாலய்யனும் மகிழ்ந்து போய் அங்கேயே தங்கினான்.

ஒரு வாரமாயிற்று. ஆசிரம வாழ்க்கை அவனுக்கு அலுத்துப் போயிற்று. ஆசிரம விதிகளைக் கடைப்பிடிப்பதும் அங்கு கொடுக்கப்படும் எளிய உணவைச்சாப்பிடுவதும் அவனுக்குச் சிரமமாக இருந்தது.

ஒரு நாளிரவு அவன் தூங்கிக் கொண்டிருந்த போது சதானந்தர் அவனைத் தட்டி எழுப்பி ''நான் இப்போது ஜெபம் செய்ய நினைத்து என் ஜெப மாலையை எடுக்கப் போனேன். ஆனால் அது நான் வைத்த இடத்தில் இருக்கவில்லை. எங்கு தேடியும் கிடைக்கவும் இல்லை. வா. இருவருமாகத்தேடிப்பார்க்கலாம்'' என்று கூறி அவனை அழைத்துக் கொண்டு ஆசிரமத்திற்கு வெளியே சென்றார்.

பாலய்யனும் ''சுவாமி! நீங்கள் படுக்கப் போகுமுன் ஜெபமாலையை எங்கு வைத்தீர்கள் என்று நினைவில் இல்லையா?'' என்று கேட்டான். அவரும் ''என்அறையில்மூலையிலிருக்கும் முக்காலி மீது நான் வைத்தது மிக நன்றாக நினைவில் உள்ளது. உள்ளே இருட்டாகஇருப்பதால்வெளியே வெளிச்சமான இடத்தில் தேடிப்



பார்க்க எண்ணினேன். இங்கே நிலா வெளிச்சம் இருக்கிறது'' என்றார்.

அதுகேட்டு பாலய்யன் தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டு ''சுவாமி! மாலையை வைத்த இடத்தில்தான் தேட வேண்டுமேயொழிய வேறு இடத்திலா போய்த் தேடுவது?'' என்று கேட்டான்.

அதைக் கேட்டு சதானந்தர் மெல்லச் சிரித்து ''சரியாகச் சொன்னாய் பாலய்யா! ஆனால் நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்? உன் குடும்பத்தில் இழந்த மன நிம்மதியை எங்கெங்கோ திரிந்துதானே தேடிக் கொண்டிருக்கிறாய்? அதுபோல அறையில் தொலைந்து போன மாலையை இங்கே தேடிப் பார்த்தால் கிடைக்கலாம் அல்லவா?'' என்று கேட்டார்.

பாலய்யனுக்கு சதானந்தர் என்ன சொல்ல விரும்புகிறார் என்பது புரிந்து விட்டது. அவன் அவரது கால்களில் விழுந்து ''சுவாமி! என் கண்களைத் திறந்து விட்டீர்கள். நான் இப்போதே என் ஊருக்குப் போய் நிலைமையைச் சீர்திருத்தி குடும்ப வாழ்வில் நிம்மதியைக் காண்கிறேன்'' என்றான்.

சதானந்தரும் ''இப்போது எதற்கு? நாளை நீ போகலாம். போகும் போது இங்கிருந்து உன் மனைவியையும் கூடவே அழைத்துச் செல்'' என்றார்.

பாலய்யன் திகைத்து நிற்கவே சதானந்தரும் ''ஆம். உன் மனைவி இன்று இங்கே வந்தாள். அவளுக்கு நீ இங்கே இருப்பது தெரியவந்ததாம். அவள் என் கால்களில் விழுந்து இனிமேல் வீட்டில் எவ்விதச் சண்டையும் தான் போடுவது இல்லை என அவள் உறுதி கூறி உன்னை தன்னோடு அனுப்பி வைக்கும்படி வேண்டினாள். இனி உனக்கு உன் வீட்டில் நிம்மதி கிடைக்கும்'' என்றார்.

மறுநாள் பாலய்யன் சதானந்தரின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டு தன் மனைவியுடன் தன் ஊருக்கு கிளம்பினான்.






குந்தியும் பாண்டவர்களும் வெளியூரிலிருந்து வந்த அந்தணர் கூறுவதைக் கவனமாகக் கேட்கலானார்கள். அவரும்பாஞ்சால மன்னன்துருபதனைப் பற்றி விவரமாகக் கூறலானார்.

பாஞ்சால மன்னன் துருபதன் துரோணரைக் கொல்ல ஒரு மகனையும் அர்ஜுனனுக்கு மணம் செய்து வைக்க ஒரு மகளையும் பெற வேண்டும் என்ற வெறியில் பல முனிவர்களின் ஆசிரமங்களுக்குச் சென்றான். அங்கெல்லாம் சரியான பதில் கிடைக்காததால் கங்கையும் யமுனையும் சேருமிடத்திலுள்ள ஒருஆசிரமத்தைஅடைந்தான். அங்கு யாஜன், உபயாஜன் என்ற சகோதரர்கள் தவம் செய்து கொண்டு இருந்து வந்தார்கள்.

அவர்களில் உபயாஜன் அதிக தவ வலிமைகொண்டவன்எனதுருபதன எண்ணிஅவருக்குப்பணிவிடைகள செய்து வரலானான். ஒருநாள் அவன்அவரிடம் ''குருவே!துரோணர் என்னை அவமானப்படுத்தி விட்டார். அவரை வெல்ல எந்த க்ஷத்திரியனாலும் முடியாது. அவரைக் கொல்லும் வலிமை பெற்ற மகன் எனக்குப் பிறக்க நீங்கள் அருள வேண்டும். உங்களுக்குக்காணிக்கையாகஏராளமான பசுக்களையும் நீங்கள் கேட்கும் பொருளையும் கொடுக்கிறேன்'' என்று வேண்டினான்.

ஆனால் உபயோஜனோ தான் அவ்வாறு செய்ய முடியாது எனத் திட்டவட்டமாக மறுத்து விட்டார்.

—துருபதனின் மக்கட்பேறு—



ஆயினும் துருபதன் நம்பிக்கையை இழக்கவில்லைஒருவருடம்கழிந்ததும் உபயாஜர் ''துருபதா! நீ எனக்குச் செய்து வரும் பணிவிடைகளால் மகிழ்ந்தேன். ஆனால் உன் விருப்பத்தை என்னால் நிறைவேற்றி வைக்க முடியாது. வேண்டுமானால் என் அண்ணனை மகிழ்வித்து அவருக்குஏராளமானபசுக்களும்பொருளும்கொடுப்பதாகநீஆசைகாட்டினால் அவர் உன் விருப்பத்தை நிறைவேற்றி வைப்பார்'' என்றார்.

துருபதனும் யாஜனின் ஆசிரமத்திற்குச் சென்று அவருக்கு எண்பதாயிரம் பசுக்களைக்காணிக்கையாகச் செலுத்தித் தன் விருப்பத்தை அவரிடம் தெரிவித்தான். அவரும் அவன் கொடுத்தவற்றை ஏற்றுக் கொண்டு அவனது விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதாகக் கூறினார்.

அவர் உபயாஜனைத் தனக்கு உதவ அழைத்துக் கொண்டு புத்திரகாமேஷ்டி யாகத்திற்கு வேண்டிய பொருள்களைச்சேகரித்துக்கொண்டு அதனைச் செய்யலானார். அவர் ஹோமத் தீயை வளர்த்து அதில் ஹவிஸைப் போடக் கையில் எடுத்து துருபதனின்மனைவி கோகிலாதேவியிடம் ''நீ இதை வாங்கிக் கொள். இதனால் உனக்கு ஒரு மகனும் ஒரு மகளும் பிறப்பார்கள்'' என்றார்.

அவளோ ''நான் குளித்து விட்டு வந்துவிடுகிறேன்.அதுவரை பொறுங்கள்'' என்றாள். யாஜனோ ''நான் கொடுப்பதை ஏற்கவா மறுக்கிறாய்? இதற்கு சக்தி இல்லை என்றா எண்ணிவிட்டாய்?நீவாங்கிக்கொள்ளாவிட்டால் போ'' எனக் கூறி ஹோமத் தீயில் அதனைப் போட்டார். மறுநிமிடம்ஹோமகுண்டத்திலிருந்துஒரு கையில் வாளுடனும் மற்ற கையில் வில்லுடனும்ஒருமாவீரன்வெளியே வந்தான். அடுத்து ஹோமகுண்டத்திலிருந்து களை பொருந்திய பெண் ஒருத்தி வெளி வந்தாள். இவர்கள் துருபதனின் மகனும் மகளுமாக ஆயினர். கோகிலாதேவியும் குளித்து விட்டு வந்து அவர்கள்இருவரையும் தான் பெற்ற குழந்தைகளாக ஏற்பதாக யாஜனிடம் கூறி அவரது இசைவையும் பெற்றாள்.

அந்தணர்கள் ஆண் குழந்தைக்கு திருஷ்ட்த்யும்னன் என்றும் கருப் பாக இருந்த பெண் குழந்தைக்குக் கிருஷ்ணாஎன்றும்பெயரிட்டார்கள். துருபதனும் யாஜனுக்கு மேலும் பல்லாயிரம்பசுக்களையும்பொன்னை யும்பொருளையும்கொடுத்துவிட்டுத் தன் மனைவி மக்களுடன் தலைநக ரான்காம்பில்ய நகரத்திற்குதிரும்பி ச் சென்றான்.

சிலவருடங்களுக்குப்பின்துருப தன் தன் மகன் திருஷ்ட்த்யும்னனை துரோணரிடம் வில்வித்தை பயில அனுப்பினான். அவனுக்கு வில் வித்தை கற்றுக் கொடுக்க முடியாது என்று கூறினால் தனக்குத்தான் கெட்ட பெயர் என்று எண்ணிய துரோணர் அவனைத் தன் சீடனாக ஏற்றுக் கொண்டார்.

துருபதன்தன்மகளானகிருஷ்ணா எனப்பட்ட துரௌபதியை அர்ஜுன னுக்குத்தான் மணம் செய்து வைக்க வேண்டுமென்று ஆரம்ப முதலே எண்ணி இருந்தான். ஆனால் பாண்ட வர்கள் அரக்கு மாளிகையில் எரிந்து சாம்பலாகி விட்டார்கள் என்று கேள் விப் பட்டதும் அவன் மனம் இடிந்து போயிற்று.

அவன் தன் அமைச்சர்களையும் புரோகிதர்களையும் உறவினர்களை யும் ஒன்று கூட்டி யோசனை கேட் டான். புரோகிதர் எழுந்து ''அரசே! பாண்டவர்களுக்கு எந்த ஆபத்தும் ஏற்பட்டதாக எனக்குத் தெரிய வில்லை. பல சகுனங்களையும் ராசி களையும் பொருத்திப் பார்த்ததில்





அவர்கள் சுகமாகவே இருப்பதாகத் தெரிகிறது. நீங்கள் சுயம்வரம் என்று அறிவியுங்கள். அவர்கள் அதற்கு வந்து சேர்வார்கள்'' என் றார்.

மூன்று மாதங்களுக்குப் பிறகு சுயம்வர நாள் குறிக்கப்பட்டது. மிகக் கனமான வில் ஒன்று தயாரிக்கப் பட்டது. ஓரிடத்தில் உயரச் சுழன்று கொண்டிருக்கும் தங்க மீன் ஒன்று அமைக்கப்பட்டது. அது பற்றி அறி வித்துள்ளார்கள்.''

இவ்வாறு ஏகசக்கரபுரத்திற்கு வந்த அந்தணர் கூறி ''நான் இப்போது காம் பில்ய நகரத்திற்குத்தான் போய்க் கொண்டிருக்கிறேன். அப்போது அந் தணர்களை கௌரவித்து நிறைய தட் சிணையும் கொடுப்பார்களாம். நீங் களும் என்னோடு வரலாம்'' எனக் கூறினார்.

அதை எல்லாம் கவனமாகக் கேட்ட குந்தி தேவியும் தருமரிடம் ''நாமும் வெகு நாட்கள் இந்த ஊரில் இருந்து விட்டோம். இனியும் இந்த வீட்டு அந்தணருக்கு பாரமாக நாம் இருக்கக் கூடாது. நாம் பாஞ்சால நாட்டிற்குச் செல்வோம். காம்பில்ய நகரம் வளமானதாம்'' என்றாள்.

தருமரும்தம்தம்பிகளிடம்பேசி அன்னை கூறிய யோசனையை ஏற்கச் செய்தார். அதன்பின் அவர் வீட்டு சொந்தக்கார அந்தணரிடம் விஷயத் தைக் கூறி அவரிடம் விடைபெற்றுக் கொண்டு தம் தாயுடனும் சகோதரர் களுடனும் காம்பில்ய நகருக்குக் கிளம்பினார்.

அவர்கள் தம் பயணத்தின் போது நள்ளிரவில் கங்கை நதிக் கரையை அடைந்தார்கள். அது சோமஸ்ரவம் என்ற புனிதத் தலம். அர்ஜுனன் எரியும் கொள்ளிக் கட்டையைப் பிடித்துக் கொண்டு வழிகாட்டிக் கொண்டிருந்தான். முதலில் கண்ட கங்கையில் அவர்கள் அப்போதே நீராட இறங்கினார்கள்.

அச்சமயம் அங்காரவர்த்தனன் என்ற கந்தர்வன் தன் மனைவிகளுடன் ஜலக் கிரீடை செய்து கொண்டிருந் தான். அவன் பாண்டவர்கள் நதியில் இறங்கி வருவதைக் கண்டு ''யார் வருவது? இது கந்தர்வர்களுக்கான வேளை. இச்சமயம் எங்களுக்கு

யாரும் தொந்தரவு கொடுக்கக் கூடாது. தெரிந்ததா?'' என்று உரக்கக் கூறினான்.

அதைக் கேட்ட அர்ஜுனன் ''அடே! இமயமும் கங்கையும் யாவருக்கும் பொதுவானது. கங்கையை எந்த வேளையில் முதல் முதலாகப் பார்த்தாலும் உடனே அதில் நீராட வேண்டும். எனவே நாங்கள் இதில் இப்போது குளிக்கத்தான் போகிறோம்'' என்றான். அங்காரவர்த்தனன் அதுகேட்டுக்கோபம்கொண்டு அம்புகளை எய்தான். அர்ஜுனன் தன் கையிலிருந்த கொள்ளிக்கட்டையால் அவற்றை எல்லாம் தடுத்து ''அடே கந்தர்வா! உன் அம்புகள் எங்களை ஒன்றும் செய்து விடாது. இதோ நான் எய்யும் அம்பைப் பார்'' எனக் கூறி அக்கினி அஸ்திரத்தை எய்தான். அதனால் கந்தர்வனின் ரதம், ஆயுதங்கள் ஆகியவை எரிந்து சாம்பலாயின. கந்தர்வனும் தன் நினைவை இழந்து கீழே விழுந்தான்.

கந்தர்வனின் மனைவி கும்பினசி தருமரின் கால்களில் விழுந்து தன் கணவனைக் காப்பாற்றும்படி வேண்டினாள். தருமரும் அர்ஜுனனிடம் ''இவள் நம்மிடம் தஞ்சம் அடைந்து விட்டாள். அதனால் இவளது கணவனை ஒன்றும் செய்யாமல் விட்டு விட'' என்றார். அர்ஜுனனும் கந்தர்வனை எதுவும் செய்யாமல் விட்டு விட்டான்.

கந்தர்வனும் அர்ஜுனனிடம் ''நான் உன்னிடம் தோற்றுப் போனதால் என் பெயரையே மாற்றிக்



கொண்டு விடுகிறேன். நீ எரித்த ரதத்திற்கு பதிலாக வேறொரு ரதம் அமைத்துக் கொள்கிறேன். அதனால் என் பெயரைச் சித்திரரதன் என்று மாற்றிக் கொள்கிறேன். மாவீரனான உனக்கு சாட்சுசி என்ற மந்திரத்தை உபதேசிக்கிறேன். இதனால் மூவுலகிலும் எங்கு என்ன நடக்கிறது என்பது உனக்குத் தெரியும். இதனால்தான் எங்களை தேவர்களாலோ அல்லது அசுரர்களாலோ எதுவும் செய்ய முடியவில்லை. இந்த மந்திரத்துடன் உனக்கு வேறு சில திவ்விய அஸ்திரங்களையும் கற்றுக் கொடுக்கிறேன். இதுபோல் உன் சகோதரர்கள் ஒவ்வொருவருக்கும் நூறு குதிரைகள் வீதமும் கொடுக்கிறேன்'' என்றான்.



அதற்கு அர்ஜுனன் ''நான் யாரிடமிருந்தும் எதையும் இலவசமாகப் பெறுவதில்லை'' என்றான். அது கேட்டு கந்தர்வன் ''அப்படியானால் நீ எனக்கு எதையாவது கொடுத்து விட்டு நான் கொடுப்பதைப் பெற்றுக் கொள்'' என்றான். அர்ஜுனனும் சித்திரரதனுக்கு அக்கினி அஸ்திரம் பிரயோகிக்கும் மந்திரத்தை உபதேசித்தான். அதன்பின் கந்தர்வன் கொடுத்த குதிரைகளையும் சிறப்பு அஸ்திரங்களையும் பெற்றுக் கொண்டான்.

அப்போது அர்ஜுனன் ''நீ கொடுத்த குதிரைகள் இப்போதைக்கு உன்னிடமே இருக்கட்டும். எங்களுக்குத் தேவைப்படும் போது அவற்றைக் கேட்டு வாங்கிக் கொள்கிறோம்'' என்றான். அதன் பின் கந்தர்வனிடம் விடைபெற்றுக் கொண்டு பாண்டவர்களும் குந்தி தேவியும் காம்பில்ய நகரை நோக்கிச் சென்றார்கள்.

அவர்கள் உத்கோச தீர்த்தம் என்ற இடத்தை அடைந்தார்கள். அங்கே தௌம்யர் என்பவர் தவம் புரிந்து கொண்டிருந்தார். பாண்டவர்கள் அவரை வணங்கி அவரைத் தமக்குப் புரோகிதராக இருக்கும்படி வேண்டிக் கொண்டார்கள். அவரும் பாண்டவர்களின் தகுதி, திறமை, அறிவு ஆகியவற்றைப் பற்றி அறிந்து கொண்டு அவர்களுக்கு புரோகிதராக இருக்கச் சம்மதித்தார். அவர்களைத் தம் ஆசிர

மத்தில் தங்க வைத்து உணவளித்து மரியாதைகளை செய்தார்.

தௌம்பர் தமக்குப் புரோகிதராக இருக்கஇசைந்ததுகண்டுபாண்டவர் கள்ஏதோபெரியசாம்ராஜ்யத்தையே அடைந்து விட்டது போல மகிழ்ந்து போனார்கள். இச்சமயம் துரௌபதி யின் சுயம்வரத்தைக் காணச் சென்று கொண்டிருந்த சிலர் தௌம்யரின் ஆசிரமத்திற்கு வந்தார்கள். அவர்களி டம் பாண்டவர்கள் தாமும் அச்சுயம் வரத்தைக்காணவிரும்புவதாகவும் அதற்காகஅவர்களோடு சேர்ந்து காம் பில்ய நகருக்கு வருவதாகவும்கூறி னார்கள்.

அந்தணர்கள் போல வேடம் பூண் டிருந்த பாண்டவர்களைப் பார்த்து அவர்கள் ''நீங்கள் எல்லாம் யார்? எந்த ஊரைச் சேர்ந்தவர்கள்? எங்கி ருந்துவந்துகொண்டிருக்கிறீர்கள்?'' என்றுபலவாறுகேள்விகள்கேட்டார் கள். தருமரும் ''நாங்கள்ஏகசக்கர புரத்திலிருந்து வந்தவர்கள்'' என்று பதில் கூறினார். வந்தவர்களும் ''அப் படியா? ரொம்ப நல்லதாகப் போயிற்று. நாம்எல்லோருமேகாம் பில்ய நகருக்குச்செல்வதால்ஒருவ ருக்கொருவர்துணையாக இருப போம்'' என்றார்கள்.

மேலும்அவர்கள் ''பாஞ்சால மன் னன்சுயம்வரம்நடத்துகிறார்என்றால் அது சாமான்னியப்பட்டதா என்ன? அரசகுமாரர்கள், பண்டிதர்கள், ரிஷி முனிவர்கள், அந்தணர்கள் என்று பெரும்கூட்டம்இருக்கும். அரசர் எல் லோரையும் தக்கபடி உபசரித்து மரியாதை செய்வார். நம் பிராம்மணர் களுக்கு நல்ல போஜனமும் கை நிறைய தட்சணையும் கிடைக்கும். இதைவிட வேறு என்னநமக்கு வேண் டும்? கவலை இல்லாமல் அங்கு நடக்கும் வேடிக்கை விநோதங்களை எல்லாம் கண்டு களிக்கலாம்'' என் றார்கள்.

பாண்டவர்கள் தௌம்யரையும் குந்தி தேவியையும் அழைத்துக் கொண்டு அவர்களோடு சேர்ந்து காம் பில்ய நகருக்குச் சென்றார்கள்.



**அம்புலிமாமா அனுபந்தம்—80**

**நம் தேச மரங்கள்:**

# கள்ளி மந்தாரை

**நாம்** சில பொருள்களை மேலெழுத்தவாரியாகப் பார்த்து அவற்றின் அழகை ரசிக்கிறோம். பலவித வண்ண மலர்களைக் கண்டு மகிழ்கிறோம். இப்படிப்பட்டவற்றில் மந்தாரை மலரும் ஒன்று. மந்தாரை மரங்களைப் பெரும்பாலும் ஆலயங்களில் காணலாம். இதன் மலர்களை ஹிந்துக்கள் பூஜைக்கும் பயன்படுத்துகிறார்கள். இந்த மரம் எந்த இடத்திலும் வளரக் கூடியது. அதனால் பௌத்தர்கள் இதனை இறவா மரம் எனக் கருதுகிறார்கள். இந்த மரங்களை மயானங்களில் கூடக் காணலாம்.

சுமார் இருபது அடி உயரம் வரை வளரும் இம்மரத்தின் கிளைகள் வளைந்திருக்கும். இதன் இலையைக் கிள்ளினாலோ அல்லது கிளையை வெட்டினாலோ பால் போன்ற திரவம் அந்த இடத்திலிருந்து வடியும். தாவர இயலில் இதற்கு 'ஃப்ராங்கி பானி' என்று பெயர். இப்பெயர் வரப் பல காரணங்களைக் கூறுகிறார்கள். இம்மரத்திலிருந்து பால் சுரப்பதால் பிரெஞ்சுக்காரர்கள் இப்பெயரை வைத்தனராம். ஒரு இத்தாலியர் இதிலிருந்து ஒரு வாசனைத் தைலத்தை தயாரித்ததால் இதற்கு அவரது பெயரை வைத்து விட்டதாகவும் கூறுகிறார்கள். தமிழில் கள்ளி மந்தாரை எனப்படும் இதனை சமஸ்கிருதத்தில் 'க்ஷீர சம்பா' எனக் குறிப்பிடுகிறார்கள்.

இதன் இலைகள் தடிமனாயும் நீண்டும் அகலமாயும் இருக்கும். கிளையின் இருபுறங்களிலும் இலைகள் வளரும். மலர்கள் பூத்ததும் பார்க்க மிக அழகாக இருக்கும்.

இந்த மரத்தில் இலைகளையும், மலர்களையும், மரத்திலிருந்து வெளிவரும் பால் போன்ற திரவத்தையும் பலவித மருந்துகளையும் தைலங்களையும் தயாரிக்க உபயோகிக்கிறார்கள். இதன் பட்டையைக் கூட தோல் சம்பந்தமான நோய்களைக் குணப்படுத்த பயன்படுத்துகிறார்கள்.

இம் மரங்களை அழகிற்காகக் கூட நட்டு வளர்க்கிறார்கள்.



நம் நாட்டு முனிவர்கள்–4

# உத்தாலகர்



வேத மந்திரங்களைத் தம் சீடர்களுக்கு நன்கு கற்பித்த முனிவர்களில் உத்தாலகரும் ஒருவர். இவர் அருணனின் மைந்தர். அதனால் ஆருணீ என்ற பெயரையும் பெற்றார். ஆருணீ சிறு வயது முதலே கல்வியில் ஈடுபாடும் குருவிடம் சிரத்தையும், பயபக்தியும் கொண்டிருந்தார். இவர் கல்வி கற்க தௌம்யரின் சீடராகச் சேர்ந்தார்.

தௌம்யரின் ஆசிரமத்தருகே ஒரு குளமும், வயலும் இருந்தன. ஆருணீ குருவிடம் சிரத்தையுடன் கல்வி பயின்று அவரது சிறந்த சீடர்களில் ஒருவராக விளங்கினார். அவர் வேத வேதாங்கங்களை நன்கு பயின்று அவற்றின் முழுப் பொருளையும் அறியவே முயன்று வந்தார்.

ஒரு நாள் பெரும் மழை பெய்தது. ஆசிரமத்தின் அருகேயுள்ள குளத்தை அடுத்து ஆசிரம வயல் இருந்தது. வயலில் பயிர் நன்கு வளர்ந்து தளதளவென்று இருந்தது. மழை வலுக்கவே, குளத்தின் கரையில் உடைப்பு ஏற்பட்டு ஆசிரம வயலில் தண்ணீர் நிரம்பி விடுமோ என்று குரு பயந்தார்.

அதைக் கவனித்த ஆருணீ தன் குருவிடம் ''குருவே! நான் போய் நிலைமை யைச் சரி செய்கிறேன். எனக்கு அனுமதி அளியுங்கள்'' என்று கோரினான். அப்போது மழையும் கொஞ்சம் குறையவே குருவும் அவன் போவதற்கு அனுமதி அளித்தார்.

அவன் வயலுக்குச் சென்று குளத்தைப் பார்த்தான். அங்கு குளக்கரையில் ஒரு சிறு ஓட்டை ஏற்பட்டு அதன் வழியாக நீர் வந்து கொண்டிருந்தது. ஆருணீ அந்த ஓட்டையை மண்ணை எடுத்து அப்பி அடைக்க முயன்றான். ஆனால் அதில் வைக்கப்பட்ட மண் கரைந்து கீழே விழுந்தது. நீர் இப்படியே வந்தால் ஓட்டை பெரிதாகி உடைப்பு எடுத்து விடும் என நினைத்த ஆருணீ அந்த ஓட்டையை அடைக்கத்தானே படுத்துத் தன் உடலால் குளத்திலிருந்து அந்த ஓட்டை வழியாக வரும் நீரைத் தடுத்து நிறுத்தினான்.

நீர் குளத்திலிருந்து வருவது நின்று

போனபோதிலும் ஆருணீயின் உடல் குளிரால் நடுங்கியது. மழை வேறு அதிகரிக்கலாயிற்று. ஆனாலும் ஆருணீ தான் இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. சற்று நேரத்தில் அவன் தன் நினைவையும் இழந்து விட்டான்.

வெகுநேரமாகியும் ஆருணீ திரும்பி வராததால் தௌம்யர் கவலைப்பட்டு தன் சீடர்களுடன் குளக்கரைக்கு வந்தார். அவர்கள் அங்கு வரும்போது காலையாகி விட்டது. அங்கு படுத்திருக்கும் ஆருணீயைக் கண்டு அவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். தௌம்யர் அவனைத் தூக்க, சீடர்கள் மண்ணை விரைவாக எடுத்து வந்து அந்த ஓட்டையை அடைத்தார்கள்.

ஆருணீயை தூக்கிச் சென்று ஹோம குண்டத்திற்கருகே கிடத்தி அவனது உடலில் சூடேறச் செய்தார்கள். அதன் பிறகே அவன் தன் நினைவைப் பெற்றான்.

தௌம்யரும் "ஆருணீ! இன்றே உன் படிப்பு நிறைவுற்றது என்பதை நிரூபித்து விட்டாய்!" என்றார். வேத வேதாங்கங் களைக் கற்ற போதிலும் ஆருணீ உடல் உழைப் பிற்குச் சற்றும் தயங்கவில்லை. பிறர் நலனுக்காக அவன் தன் உயிரைக் கூட விடுவதற்கு தயாராக இருந்தான். அவன் தான் செய்தது அரிய செயல் என்று கர்வப் பட்டுக் கொண்டதும் இல்லை. இதனால் தான் தௌம்யர் அவனைப் பாராட்டி வந்தார்.

ஆருணீயும் உத்தாலகர் என்ற பெயரோடு சிறந்த குருவாகி தம் சீடர்களின் அபிமானத்தையும் கௌரவத்தையும் பெற்றார்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. கஜுராஹோ ஆலயங்கள் நம் நாட்டில் எந்த மாநிலத்தில் உள்ளன?
2. முதன்முதலில் நீர்மூழ்கிக் கப்பலை உருவாக்கியவர் யார்?
3. பால், பாலேடு இவற்றில் கனமானது எது?
4. சீக்கியர்களின் புனித நூல் எது?
5. நோபல் பரிசு பெற்றவர்களில் மிகக் குறைந்த வயதானவர் யார்?
6. 'சால்ட் லேக்' எனப்படும் ஸ்டேடியம் எங்கே உள்ளது?
7. வெறிநாய் கடிக்கு மாற்று மருந்து கண்டுபிடித்தவர் யார்?
8. பூனை இன மிருகங்களுக்குத் தற்காப்பிற்கு கூர் நகங்கள் உண்டு. ஆனால் அவற்றில் ஒரே ஒரு மிருகத்திற்கு மட்டும் நகங்கள் இல்லை. அது எது?
9. காலண்டர் முறையை முதன்முதலில் கண்டுபிடித்த நாடு எது?
10. நம் நாட்டில் 'நேரு படகுப் போட்டி' எங்கு நடக்கிறது?
11. 'ஜலநகரம்' எனப்படுவது 13 தீவுகளில் அமைந்துள்ளது. அந்நகரின் பெயர் என்ன?
12. முதலாவது பேஷ்வா யார்?
13. ரோம் நகரம் எந்த நதிக் கரை மீது அமைந்துள்ளது?
14. முதலாவது விண்வெளிக் கப்பல் எது? எப்போது விண்வெளியில் விடப்பட்டது?
15. பத்து ஆண்டுகளாக உலக சாம்பியனாக இருப்பவர் யார்?
16. வெளவால் எவ்வளவு வேகத்தில் பறக்கும்?
17. 'தாய்லாந்'தின் முந்தைய பெயர் என்ன?
18. பெண் 'ப்ளாக்பர்ட்'டின் நிறம் என்ன?
19. காற்றுக்காக நீரினுள்ளிருந்து திமிங்கலம் வெளியே வராமல் எவ்வளவு நேரம் நீரினுள்ளே இருக்க முடியும்?
20. சீனாவின் நாணயத்தின் பெயர் என்ன?

## விடைகள்

1. மத்திய பிரதேஷ்.
2. காம்லியன்வான்ட்ரேலில்.
3. பால்.
4. கிரந்தசாஹேப் (ஆதிக்ரந்த்).
5. வில்லியம் லாரென்ஸ் ப்ராக்.
6. கல்கத்தாவில்.
7. லூயி பாஸ்டர்.
8. சிறுத்தைப் புலி.
9. எகிப்து.
10. கேரளா மாநிலத்தில் ஆலப்புழை அருகே.
11. ஸ்டாக்ஹோம்.
12. பாலாஜி விஸ்வநாத். 1713–1720 வரை பதவி வகித்தவர்.
13. டைபர் நதி.
14. ஸ்புட்னிக், 1957ல்.
15. ஆன்டோலி கார்ஸோான்.
16. மணிக்கு 60 கி.மீ.
17. சயாம்.
18. கோதுமை நிறம்.
19. 20 நிமிடங்கள்.
20. யுவான்.



# சிரித்து வாழ்!

மதனகோபாலன் என்ற பணக்காரனின் மூளை வக்கிரமானது. பிறரைத் துன்புறுத்தி வேடிக்கை பார்ப்பதில் அவன் சந்தோஷப்பட்டு வந்தான். அவனைக் கண்டால் எல்லோரும் பயந்தார்கள்.

இந்த விஷயம் அவனது மைத்துனர் கைலாசநாதனுக்குத் தெரிய வந்தது. தன் தங்கையின் கணவனை நேர் வழிப்படுத்தும் நோக்கத்தோடு அவன் மதனகோபாலனின் ஊருக்கு வந்தான்.

மதனகோபாலனும் தன் மைத்துனனை வரவேற்று தான் அந்த ஊரில் யார் யாரை எல்லாம் எப்படி எப்படியெல்லாம் துன்புறுத்தி வேடிக்கை பார்த்தான் என்பதைச் சொல்லிச் சொல்லி சிரித்தான். ஆனால் அதையெல்லாம் கைலாசநாதன் கேட்டு சிரிக்காமல் ''நீங்கள் செய்வதைப் பார்த்தால் சிரிப்பு வரவில்லை. பயம் தான் ஏற்படுகிறது'' என்றான்.

''நகைச்சுவை ஒரு அரிய கலை. அதை ரசிக்க ஒருவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். நாளை ஒரு கூட்டத்தைக் கூட்டி அவர்கள் சிரிக்க பல விஷயங்களைக் கூறுகிறேன். நீயே பார்'' என்று மதனகோபாலன் தன் மைத்துனனிடம் கூறினான்.

மறுநாள் மதனகோபாலன் கூட்டிய கூட்டத்திற்கு அவ்வூரார் வந்தனர். அவர்கள் மதனகோபலன் கூறிய ஒவ்வொரு விஷயத்தையும் கேட்டுச் சிரித்தனர். அவற்றில் சிரிக்கக்கூடிய விஷயம் எதுவும் இல்லையே என எண்ணிக் கைலாசநாதன் ஆச்சரியப் பட்டான்.

அவன் வீட்டிற்கு வந்து தன் தங்கையிடம் அந்த அதிசயத்தைக் கூறினான். அவளோ ''உன் அத்தான் பணம் கொடுத்து அவர்களை வரச் சொல்லி மிரட்டி சிரிக்கவும் சொல்லி இருக்

—சிவனார் செல்வன்—



கிறார். சிரிக்காதவர்களுக்கு இவர் சவுக்கடி கொடுப்பார்'' என்றாள்.

அன்று மதனகோபாலன் தனியாக இருக்கையில் அவனிடம் கைலாச நாதன்போய் ''அத்தான்! எல்லோரு க்கும் பணம் கொடுத்து நீங்கள் எதைச் சொன்னாலும் அவர்கள் சிரிக்க வேண்டும் என மிரட்டிச் சிரிக்க வைத்தால் அது நகைச்சுவை ஆகிவிடாது. நகைச்சுவை என்பது ஒருவன் ஒரு விஷயத்தைக் கேட்ட மாத்திரத்தில் சிரிப்பது. பணம் கொடுத்து பயமுறுத்தி சிரிக்க வைப்பது அல்ல'' என்றான்.

அப்போது மதனகோபாலன் ''ஓ! உனக்கு விஷயம் தெரிந்து விட்டதா? அது சரி. உன்னால் என் போல் பணம் கொடுத்து ஒருவனைச் சிரிக்க வைக்க முடியுமா?'' என்று கேட்டான். கைலாசநாதனும் ''என்னால் சிரிக்கத் தான் முடியும். சிரிக்க வைக்க முடியாது. எங்கள் ஊரில் சிகாமணி என்ற இளைஞன் இருக்கிறான். அவனால் எப்படிப்பட்ட அழுமூஞ்சியையும் சிரிக்க வைக்க முடியும். அவனை வரவழைக்கிறேன் சரியா?'' என்றான். எனவே மதனகோபாலனும் அவ்வாறே செய்யச் சொன்னான்.

சிகாமணியும் வந்து சேரவே மதனகோபாலன் ''எங்கள் கைலாசநாதன் என்ன சொல்கிறான் தெரியுமா? உன்னால் யாரை வேண்டுமானாலும் சிரிக்க வைக்க முடியும் என்றுதான். உன்னைப் பரீட்சித்துப் பார்க்க விரும்புகிறேன். நீ அதற்குத் தயாரா?'' என்று கேட்டான்.

அதைக்கேட்டு சிகாமணி விழுந்து விழுந்து சிரித்தான். மதனகோபாலன் முகத்தைச் சுளித்தவாறே ''ஏன் சிரிக்கிறாய்?'' என்று கேட்டான். அதற்கு சிகாமணி ''நீங்கள் எது சொன்னாலும் சிரிக்கக் கூடியதாக இருக்கும் என்று கைலாசநாதன் கூறினான். ஒரு வேளை இதுதான் நகைச்சுவையோ என்று சிரித்தேன்'' என்றான்.

அதுகேட்டு மதனகோபாலன் ''உனக்கு நகைச்சுவை எது என்று தெரியாதா?'' என்று கேட்டான். சிகாமணியும் ''தெரியும். புரியும். ஆனால் என்னைப் பரீட்சிப்பவனை மகிழ்விக்கவே நான் சிரித்தேன்'' என்றான்.

அதைக்கேட்டு அங்கிருந்தவர்களெல்லாம் பலமாகச் சிரித்தார்கள். அதனால் எரிச்சல் கொண்ட மதனகோபாலன் ''அர்த்தமில்லாத பேச்சுக்கெல்லாம் நீங்கள் சிரித்தால் உங்களுக்குச் சவுக்கடிதான் கிடைக்கும்'' என்று அவர்களை எச்சரித்தான்.

அப்போது கைலாசநாதன் ''சரி. நாளைக்குக் கூட்டம் கூட்டுங்கள். சிகாமணிகூறுவதைக்கேட்டுசிரிப்பவர்களுக்கு சவுக்கடியும், சிரிக்காதவர்களுக்குப் பணமும் கொடுப்பதாக அறிவித்துப்பாருங்கள். அப்போதும் சபையோர் சிகாமணி கூறுவதைக் கேட்டுச் சிரிக்கத்தான் சிரிப்பார்கள். என்ன பந்தயம்?'' என்றான்.

மதனகோபாலனும் ஆச்சரியப்பட்டு அதையும்தான் பார்க்கலாமே என்றான். அப்போதுசிகாமணிமதனகோபாலனிடம் ''நீங்கள் நான் கூட்டத்தில் என்ன பேசினாலும் ஆட்சேபிக்கக் கூடாது. இந்த நிபந்தனையின் பேரில்தான் கூட்டம் நடக்க வேண்டும்'' என்றான். மதனகோபாலனும் அதற்கு இணங்கினான். அன்றையக் கூட்டத்திற்கு வழக்கத்தை விட அதிகப் பேர்கள் வந்திருந்தனர்.

கூட்டத்தினரைநோக்கிசிகாமணி ''பெருமக்களே! கடவுள் எனக்குப் பிறரை சிரிக்க வைக்கும் சக்தியை அளித்திருக்கிறார். சிரிப்பு மகிழ்ச்சியால்வருவது. அதுபாதி பலத்தையும் கொடுக்கிறது. சிரிப்பு சில சமயங்களில் கெடுதலையும் செய்யும். அதனால் உங்களுக்கு கிடைக்க வேண்டிய பணம் போய் விடலாம். உங்களுக்கு





கள்பிடித்தன. அப்போது சிகாமணி ''ஐயா! நான் இன்னமும் சிரிப்பு மூட்டக்கூடிய எதையும் சொல்லவில்லையே. நீங்களெல்லாம் ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்ற கேட்டான். அப்போது ஒருவன் எழுந்து ''நாங்கள் சுமார் முன்னூறு பேர்கள் இருக்கிறோம். எங்கள் முன்னூறு பேர்களின் சவுக்கடிகளையும் நீங்கள் ஒருவரே ஏற்றால் நிலைமை எப்படி இருக்கும் என எண்ணியே சிரித்தோம். எங்கள் சிரிப்பால் நீங்கள் கஷ்டப்படுவதாக இருந்தால் நாங்கள் சிரிக்க மாட்டோம்'' என்றான்.

அதைக் கேட்டும் மதனகோபாலன் திகைத்துப் போனான். அப்போது சிகாமணி ''மனிதனைப் பணத் தால் வாங்கிவிட முடியாது. அவன் தனக்கு தண்டனை கிடைக்கப் போவது பற்றியும் கவலைப்பட மாட்டான். மதனகோபாலனிடமும் மனிதத் தன்மை உள்ளது. அவர் ஒன்றும் எனக்கு எல்லாச் சவுக்கடிகளையும் கொடுக்க மாட்டார். உங்களுக்கும் நான் சவுக்கடி பெறுவதில் இஷ்டம் இல்லை. எனவே இனி விஷயத்திற்கு வருவோம்'' என்றான்.

மதனகோபாலன் ''அவன் சொல்வது பொய். சிகாமணிக்கே சவுக்கடி கொடுப்பேன்'' எனக் கத்தவே கைலாசநாதன் குறுக்கிட்டு ''இவன் என்ன சொன்னாலும் நீங்கள் குறுக்கிடக் கூடாது என்ற நிபந்தனையை மறந்து விட்டீர்களா? ஆனாலும் கூட்

சவுக்கடி கிடைக்கும் என்றால் அது உங்களுக்குத் துயரத்தையும் அளிக்கலாம். எனவே உங்களை முதலில் சிரிக்க வைத்துப் பிறகு அழ வைப்பதில் எனக்கு இஷ்டமே இல்லை. உங்கள் எல்லோரையும் அழ வைப்பதைவிட நான் அழுவதே மேல். எனவே உங்களுக்குக் கொடுக்கப்படும் சவுக்கடிகளை நான் ஏற்றுக் கொள்கிறேன்'' என்றான்.

இதைக் கேட்டு மதனகோபாலன் திகைத்துப்போனான். சிகாமணியோ மற்றவர்களுக்குக் கொடுக்கும் சவுக்கடிகளை ஏற்கப் போகிறான் என அவன் எண்ணுகையில் கூட்டத்தினர் ஒரேயடியாகச் சிரிக்கலானார்கள்.

அந்தச் சிரிப்பு அடங்க சில நிமிடங்

டத்தவர் ஆரம்பத்திலேயே சிரித்து விட்டார்களே'' என்றான்.

அப்போது மதனகோபாலன் வாயடைத்து போனான். சிகாமணியோ மதனகோபாலன் கதையை மக்களுக்குக் கூறி ''நீங்கள் அவர் எதிரே கூறுவதை எல்லாம் அவர் நம்பி விடுகிறார். கடவுள் அவர் முன் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று அவரிடம் கேட்டபோதும் அவர் மக்கள் எனக்கு என்ன வேண்டும் எனச் சொல்கிறார்களோ அதையே கொடுங்கள் என்றாராம். அப்போது அவர்கால் இடறி ஒரு முட்புதரில் விழவே அவரது ஆடைகள் எல்லாம் கிழிந்து போயினவாம். அந்தக் கோலத்தில் இருந்த அவரை தெரு நாய்கள் துரத்தினவாம். வயலில் வேலை செய்பவர்கள் அவரை வேலை செய்ய வைத்தார்களாம். அவரது வண்டி மாடுகூட அவரை வண்டியில் பூட்டி விட்டு அது வண்டியில் ஏறி உட்கார்ந்து விட்டதாம்!'' இதுபோல அவர் பட்ட பல அவஸ்தைகளைக் கூறினான்.

அவற்றையெல்லாம் கேட்டு மக்கள் சிரித்தனர். அப்போது மதன கோபாலன் தன் தோல்வியை ஒப்புக்கொண்டு ''நகைச்சுவை என்பது எல்லோரையும் சிரிக்க வைத்து மகிழ்விப்பதே. ஆனால் உன் நகைச்சுவை என்னை வருத்துகிறதே'' என்றான்.

சிகாமணியும் ''வக்கிரபுத்தியையும் கெட்ட போக்கையும் விட்டால் நகைச்சுவையை அனுபவிக்கலாம். என் நகைச்சுவை நல்லவர்களைச் சிரிக்க வைத்து கெட்டவர்களை வருந்தச்செய்யும். கெட்ட வர்களும் மாறி நல்லவர்களாகி விட்டால் பிரச்னை தீர்ந்து விடும்'' என்றான்.

தன் கெட்ட போக்கைக் கண்டு தனக்கு கஷ்டங்கள் நேர்ந்தால் அது கண்டு மக்கள் சிரித்து மகிழ்கிறார்கள் என்பதை மதனகோபாலன் உணர்ந்தான். அவன் நல்லவனாக மாறி சிகாமணிக்கும்பரிசுகள் அளித்து கைலாச நாதனுக்கும் தன் நன்றியைத் தெரிவித்துக் கொண்டான்.





# என்ன பயன்?

ஒரு விறகு வெட்டி ஒருகாட்டின ருகே குடிசை போட்டுக் கொண்டு அதில் தன் மனைவியோடு வாழ்ந்து வந்தான். ஏழையாக இருந்தும் கிடைத்ததைக் கொண்டு அவன் தன் வாழ்க்கையைச் சிரமமில்லாமல் நடத்தி வந்தான். சில நாட்களுக்குப் பின் அவன் குடிசைக்கருகே சில பணக்காரர்கள் வீடுகளை கட்டிக் கொண்டு பல வசதிகளோடு இருக்க லானார்கள்.

அதைக் கண்ட விறகு வெட்டியும் அவனது மனவையும் ''நாமும் இவர் களைப் போலக் கஷ்டப்படாமல் வாழ முடியாதா?'' என்று சொல்லி யோசிக்கலானார்கள். அப்போது விறகு வெட்டி தன் மனைவியிடம் ''இவர்களுக்குப்பணம்இருந்தும்சரி யாக அனுபவிக்கத் தெரியவில்லை. என்னிடம் மட்டும் அவ்வளவு பணம் இருந்தால்எப்படி இருப்பேன்தெரி யுமா?'' என்றான்.

அவன் மனைவியும் ''முன் காலத் தில் தேவதைகள் தோன்றி வரம் கொடுப்பார்களாம். அப்படி ஏதா வது வரம் கிடைத்தால்தான் நாமும் அவர்களைப் போல இருக்க முடி யும். வேறு எப்படி நாம் அவர் களைப்போலப்பெரும்பணக்காரர் களாக ஆக முடியும்?'' என்றாள். அவள் இவ்வாறு சொல்லி முடித்த தும் அவர்கள் முன் ஒரு தேவதை தோன்றி ''நீங்கள் ஏதோ வரம் வேண்டும் எனக் கவலைப் படுவ தாகத் தெரிகிறது. நான் உங்களுக்கு மூன்று வரங்கள் கொடுக்கிறேன். அவற்றால் திருப்தி அடையுங்கள். ஒவ்வொரு வரமும் நீங்கள்விரும்பி யதைக் கொடுக்கும். ஆனால் மூன்று முறைதான் பலிக்கும்'' எனக் கூறி மூன்று வரங்களைக் கொடுத்து விட்டுப் போயிற்று.

—ரேணுகா ரவி—

கணவனும் மனைவியும் வெகு நேரம் யோசித்து விட்டு ''நமக்கு என்ன வேண்டும் என்பதை நிதான மாக யோசிக்கலாம்'' என்று தீர் மானித்தார்கள். அவன் மனைவியும் ''சரி. நான் போய் சமையலைக் கவனிக்கிறேன்.'' என்று கூறி எழுந்து போனாள்.

அடுப்பருகே உட்கார்ந்த அவள் ''இப்போது எனக்கு மீன் கிடைத்தால் பிரமாதமாகச் சமைத்து விடுவேன்'' என்று சற்று உரக்கக் கூறினாள். மறு நிமிடமே அவள் முன் சில மீன்கள் விழுந்தன. அதைக் கண்டு அவளும் அவள் கணவனும் திகைத்துப் போயி னர்.

கணவன் அப்போது ''நீ மீன் வேண்டும் என நினைத்து தேவதை கொடுத்த மூன்று வரங்களில் ஒன்றை வீணாக்கி விட்டாய். இப்படியெல் லாம் முட்டாள்த்தனமாக நினைப் பதை விட இந்த மீன்கள் ஒரு மாலை யாக உன்கழுத்தில்இருந்தால்மிகநன் றாகஇருந்திருக்கும்''என்றுகாரசார மாகவே கூறினான்.

அவன் அவ்வாறு கூறியதும் கீழே கிடந்த மீன்கள் மாலையாகி அவனது மனைவியின் கழுத்தில் போய் விழுந் தது. அதுகண்டு அவள் ''நான் ஒரு வரத்தை வீணாக்கியதாகக் கூறினாய். இப்போது நீ இன்னொரு வரத்தை வீணாக்கி விட்டாயே'' என்றாள். அவள் அந்த மாலையைக் கழற்றி எறிய முயன்றாள். ஆனால் மீன் மாலையைக் கழற்றத்தான் முடிய வில்லை.

அப்போது அவள் ''இந்த மாலை யைக் கழற்றினால்தானே என்னால் மீன் கறி செய்ய முடியும். இது என் கழுத்தை விட்டு வரவேண்டுமே'' என்றாள். மறுநிமிடமே மீன் மாலை யைக் கழற்றித் தனியாக எடுக்க முடிந்தது.

அப்போது அவர்கள் ''நம் முட் டாள் தனத்தால் தேவதை கொடுத்த மூன்று வரங்களையும் வீணாக்கி விட்டோமே''என்றுஎண்ணிவருந்தி னார்கள்.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!












It's time to go back to school again. Time for text books. Time for games. Time to meet old friends. And make new ones. Time to start studying again. Because there's so much to learn about the world around you.

From all of us here at Chandamama, have a great year in school. And remember to tell us what you've learnt everyday, when you come home from school !






HANDAMAMA

OLLECTION

ARTIG1246

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 செப்டம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



Mahantesh C. Morabad



Mahantesh C. Morabad

★ தலைப்புகள்ஒருவார்த்தையிலிருந்துநாலைந்துவார்த்தைகளுள்இருக்கலாம்.இரு தலைப்புகளுக்கும்தொடர்புஇருக்கவேண்டும். ★ஜூலை20–ம்தேதிக்குள்போட்டிக் கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/–பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை–600 026.

---

## மே மாதப் போட்டி முடிவு

| | | |
|---|---|---|
| முதலாவது போட்டோ | : | ஆடி ஆடி களிப்பூட்டும். |
| இரண்டாவது போட்டோ | : | ஆடிப் பாட மனம் துடிக்கும். |
| பரிசு பெற்றவர் | : | வி. லலிதா, திருநெல்வேலி–2. |




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

# Eagle Water Bottles

## we're all game for it

How about you?

- For cool, hygienic & odourless water.
- Useful at school & while travelling.
- Zingy shapes & colours to choose from.
- Available in capacities ranging from 325 ml. to 2200 ml.

Congo

Waves

Volga

Brooks

Amazon

OVER 1 LAKH SURPRISE GAMES TO BE WON

**NO ENTRY FEE**

No Purchase Required

To win a surprise game, match the names of Eagle Water Bottles with the phrases given below. And get this coupon stamped from your nearest Eagle outlet.

| | | | |
|---|---|---|---|
| A | Brooks | ☐ | A river in South America |
| B | Amazon | ☐ | A river in Russia |
| C | Congo | ☐ | Movement of sea |
| D | Volga | A | Streams of water |
| E | Waves | ☐ | A country in West-Central Africa |

Name:........................................ B'day..........

Address:................................................

..........................................................

Entries must reach the following address before 31/8/95. Eagle Flask Industries Ltd., Eagle Estate, Talegaon-410507. Dist.Pune. Tel: 02114-22321-25. Fax 02114-22676.

Winners will be intimated by post.



EAGLE FLASK INDUSTRIES LTD.

*There's a lot you can do with Eagle.*

DART/EF/3750